GOKULAM

# கோகுலம்

திருநெல்வேலி
மாணவர் ஸ்பெஷல்

## எங்கள் ஊருக்கு வாருங்கள்; சரணாலயம் பாருங்கள்!

ரூ.6/-

ஜூன் 2003



# கோகுலம்

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

உதவி ஆசிரியர் :
எஸ். சுஜாதா

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2 234 5622 / 23 / 24
தொலைநகல் :
044 - 2 234 5621

மின்னஞ்சல் :

ஆசிரியர் குழு :
gokulam@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.72/-
ஆறு மாதம் : ரூ.36/-

வெளிநாடு
(விமானத்தபால்) :
ஒரு வருடம் : 24 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.400/-

Bharathan Publications Private Limited, Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.


குழந்தைகள் மனம்
கவர்ந்த இதழ்




## கானகத்தில் பள்ளி துவங்கினால் என்ன ஆகும்?




## வீரம் விளைந்த மண்!

- திருநெல்வேலி மாவட்ட ஸ்பெஷல்




## ம்மே...ம்மே....

- அறிவியல் கட்டுரை




## உள்ளங்கையைக் காட்டினால் என்ன அர்த்தம்?




## நிலாவுக்குச் செல்ல ஆசையா?




## பறவைக்கு வியர்க்குமா?

- ஜக்கு பதில்


ஜூன் 2003 மலர்: 21 இதழ்: 5




# கோகுலம்

உயிர்களிடத்தில் அன்பு வேணும் - தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும். - பாரதியார்.

# செய்தித் துளிகள்



## பூகம்பம்

துருக்கியில் பிங்கோல் மாகாணத்தில் பயங்கர பூகம்பம் ஏற்பட்டது. 6.4 ரிக்டர் அளவில் பூகம்பம் பதிவானது. இதில் அந்தப் பகுதியில் இருந்த பெரும்பாலான கட்டடங்கள் தரைமட்டமாயின. நூற்றுக்கணக்கானோர் பலியாகி விட்டனர். துருக்கியில் கடந்த 71ஆம் ஆண்டு இதே போல் பயங்கர பூகம்பம் ஏற்பட்டது. அப்போதும் பிங்கோல் மாகாணம்தான் கடுமையாகப் பாதிக்கப்பட்டது. இதில் 900க்கும் மேற்பட்டோர் உயிரிழந்தனர். அதை விடப் பெரிய பூகம்பம் ஒன்று 1999ஆம் ஆண்டு ஏற்பட்டது. இதில் 20 ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் மாண்டனர்.

## வானில் அபூர்வம்!

சூரியனுக்கு மிகவும் அருகில் உள்ளது புதன் கிரகம். வானில் 28 டிகிரி கோண அளவில் மட்டுமே இதைக் காண முடியும். சூரியனைச் சுற்றி வர 8 நாட்களைப் புதன் எடுத்துக் கொள்கிறது. பூமி சுற்றி வரும் பாதையின் தளத்துக்கு 7 டிகிரி சாய் கோணத்தில் உள்ளது புதன் சுற்றும் தளம். இப்படி சாய்ந்திருப்பதால் சூரியனின் வட்டு வழியே புதன் கிரகம் நகர்ந்து செல்வதைக் காண்பது அரிது. சூரிய வட்டின் ஊடே கிரகங்கள் நகர்ந்து செல்வது 'டிரான்சிட்' என்று அழைக்கப்படுகிறது. மே ஏழாம் தேதி சூரிய வட்டை புதன் கடந்து சென்றது. இந்த அரிய காட்சியை இந்தியா, ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா பகுதிகளில் உள்ளவர்களால் காண முடிந்தது. சூரிய வட்டின் வடமேற்குப் பகுதியைக் கடக்க, புதன் கிரகம் 5 மணி நேரத்துக்கு மேல் எடுத்துக் கொண்டது. 21ஆம் நூற்றாண்டில் மட்டும் சூரிய வட்டைக் கடந்து 14 முறை புதன் கிரகம் செல்ல இருக்கிறது. அதில் முதல் நிகழ்வு இதுதான். இதற்கடுத்த புதன் டிரான்சிட் வரும் 2006ஆம் ஆண்டு நவம்பரில் நிகழும். அதை இந்தியாவில் பார்க்க முடியாது. இனி 2032 ஆம் ஆண்டு நவம்பர் 13ம் தேதிதான் இந் நிகழ்ச்சியை இந்தியாவில் பார்க்க முடியும்.

## இட ஒதுக்கீடு

லோக்சபா மற்றும் சட்ட சபைகளில் பெண்களுக்கு 33 சதவீத இடங்களை ஒதுக்கீடு செய்வதற்கான மசோதா கடந்த 99ஆம் ஆண்டு பார்லிமெண்டில் தாக்கல் செய்யப்பட்டது. இந்த மசோதா தாக்கல் செய்யப்பட்டு நான்கு ஆண்டுகளாகியும் இன்னும் அதை நிறைவேற்ற முடியவில்லை. தற்போதுள்ள வடிவத்தில் மசோதாவை நிறைவேற்றக் கூடாது என்று சில கட்சிகள் எதிர்த்து வருகின்றன. நாட்டின் முக்கிய எதிர்க்கட்சிகளான காங்கிரஸ், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், ஆளும் பா.ஜ.க. ஆகியவை பெண்கள் மசோதாவை நிறைவேற்ற தயாராக உள்ளன. அப்படியிருந்தும் மசோதாவை நிறைவேற்ற முடியவில்லை.

## நெல்லை மாவட்டச் சிறப்பிதழ்

*திருநெல்வேலியிலிருந்து நிறைய மாணவர்கள் படைப்புகளை அனுப்பியிருப்பதால் அடுத்த மாதமும் நெல்லை மாவட்டச் சிறப்பிதழாக வெளி வர இருக்கிறது.*

## அடுத்தது திருவண்ணாமலை மாவட்டச் சிறப்பிதழ்

*திருவண்ணாமலை மாவட்ட பள்ளி மாணவ, மாணவியர், இப்பொழுதே தங்களின் படைப்புகளை அனுப்ப ஆரம்பிக்கலாம். கதைகள், கவிதைகள், துணுக்குகள், ஜோக்ஸ், புதிர்கள், அனுபவங்களை எழுதி அனுப்பலாம். இது தவிர திருவண்ணாமலை மாவட்டத்தின் சிறப்புகள் வரலாற்று அம்சங்களையும் எழுதலாம். கடைசித் தேதி 15.6.2003. பிரசுரமானால் பரிசு உண்டு.*

என்.மாதவன்



# காட்டுக் கோப்பை

இன்னும் சில வாரங்களில் 'காட்டுக் கோப்பை'க்கான போட்டிகள் நடைபெற உள்ளன. உங்கள் திறமைகளைக் காட்ட முழுமையான சந்தர்ப்பம். யார் வேண்டுமானாலும் எந்தப் போட்டியில் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம்.

— யானையார்
நடுவர்.

இப்படிப்பட்ட போஸ்டர்களால் காடு அலங்கரிக்கப்பட்டிருந்தது. யானையாரின் பெருமைக்கு அளவேயில்லை. தனது சேம்பரான மரத்தடியில் அமர்ந்திருந்தார்.

போட்டிகளில் கலந்து கொள்ள பிராணிகள் பெயர் கொடுக்க, வந்து போய்க் கொண்டிருந்தன. இதனிடையே தத்தி வந்த தவளையாரின் வேண்டுகோளைக் கேட்டதும்தான் யானையார் டென்ஷனானார். "நான் ஒத்துக்க மாட்டேன், நான் ஒத்துக்க மாட்டேன், நான் ஒத்துக்கவே மாட்டேன்" உரத்த குரலில் கத்தினார்.

தவளையாரின் முகமே வாடிவிட்டது. "முதல்ல நீங்க அனுப்பின சுற்றறிக்கையை ஒழுங்காப் படிங்க" என்று உரக்கக் கூறினார்.

"ஆமாம், காட்டிலுள்ளோரின் திறமையைக் காட்ட முழுமையான சந்தர்ப்பம். யார் வேண்டுமானாலும் எந்தப் போட்டியிலும் கலந்து கொள்ளலாம் என்று எழுதியிருந்தேன். அதுக்காக 'லாங்ஜம்ப்' போட்டியில சிங்கராஜாவோடுதான் போட்டியிடுவேன் என்று வாதிடலாமா? நியாயம், தர்மம் இல்லையா?" என்று வாதாடினார் யானையார்.

இதற்குள் முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டிருந்த சிங்கராஜாவும் ஒரு வழியாகச் சமாதானத்துக்கு வந்தார். "சரிப்பா, நான் நீளம் தாண்டும் போட்டியில கலந்துக்கலப்பா" என்று ஓரங்கட்டினார்.

இதனிடையே மற்றொரு கோஷ்டி பஞ்சாயத்திற்கு வந்தது. வந்தவர்களின் குழுவில் சிவிங்கிகளில் சிலரும், குதிரைகளில் சிலரும் ஒன்றிரண்டு ஒட்டக அண்ணாச்சிகளும் இருந்தன.

"உங்களுக்கு என்னப்பா பிரச்னை?" என்று கேட்கவும், துவங்கினார் குதிரையார்.

''உங்க மூஞ்சியை நம்பி போட்டிக்கு வந்ததே எங்க தப்பு. பாருங்க, நாங்க ஓடி வந்து உயரம் தாண்டுதல் போட்டியில கலந்துக்கறோம். ஆனா சிவிங்கிகாரங்க நின்ன இடத்திலிருந்து தாண்டணும் கிறாங்க. அவங்க நல்ல ஒட்டடக்குச்சியாட்டம், உயரமா இருக்காங்க. அதனால ஈஸியாக ஜெயிச்சுடுவாங்க. எனவே ஒழுங்கா விதிமுறையை மாத்துங்க'' கொதிப்படைந்து கத்தினார்.

''ஏன் உங்க பக்கம் நியாயமிருந்தா விதிமுறை எதுவா இருந்தாலும் ஜெயிக்கணும். ஏன் அதை மாத்து இதை மாத்துங்கறீங்க? எங்களோட போட்டிப்போட பயமாயிருக்குன்னு சொல்லிட்டுப் போங்களேன்'' கோபத்தோடு கத்தினார் ஒரு சிவிங்கியார்.

இதனிடையே மான்களும் சிறுத்தைகளும் ஓடோடி வந்து மூச்சிரைக்க நின்றன.

''என்னப்பா இது கதையாகீது. எவ்வளோ பெரிய ஆளுங்க நாங்க. யாரப்பா ரெஃப்ரீ? யார் வேண்டுமானாலும் எந்தப் போட்டியிலயும் கலந்துக்கலாம்னு சொல்லியிருக்கே. யாராவது எங்கள ஜெயிச்சுட்டா நாங்களெல்லாம் மானத்தோட வாழறதா, வேணாமா?'' சென்னைத் தமிழில் புலம்பினார் சிறுத்தையார்.

''என்னை என்னதான் பண்ணச் சொல்றீங்க? நாமெல்லாம் சேர்ந்து தானே 'காட்டுக் கோப்பை'



போட்டிகள் நடத்தலாம்ன்னு முடிவு பண்ணினோம். நீங்கதானே என்னையே நடுவரா இருக்கச் சொன்னீங்க?'' என்று நொந்து நூலானார் யானையார்.

இதற்குள் பல்வேறு டீ.வி.யின் நிருபர்கள் புடை சூழ, கேமிராமேன் முயல் வந்து சேர்ந்தார். காட்டுக்கோப்பை போட்டியின் துவக்க விழா மற்றும் போட்டி விதிமுறைகள் சம்பந்தமாகப் பேட்டியளிப்பதாக யானையார் கூறியதன் விளைவு இது.

ஓவராக டென்ஷனாக இருந்த யானையார், ''பேட்டியும் கொடுக்க முடியாது, வேட்டியும் கொடுக்க முடியாது, போங்கய்யா'' எனக் கத்தினார்.

இதனிடையே ஒரு குட்டி யானையார் ''மீடியாகாரங்கள முறைச்சுக்காதீங்க'' என அட்வைஸ் கொடுக்க, ஒருவாறு சுதாரித்துக் கொண்டு, ''மீடியா நண்பர்களே, ஒரு முக்கியமான மீட்டிங் இருக்கு. அதுலதான் புதிய முடிவெல்லாம் எடுக்கப் போறோம். அதனால ஒரு அரை மணி நேரம் வெயிட் பண்ணுங்க'' என்று கூறிவிட்டுத் தனது சேம்பருக்குள் நுழைந்தார் யானையார்.




உள்ளே சேம்பரில் அனைவரும் அளவில்லாத கோரிக்கையை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். அனைவருக்கும் சமாதானமான பதிலைக் கூற முடியாமல் யானையார் சித்தம் கலங்கி, விழி பிதுங்கிக் கொண்டு வெளியே வந்தார்.

இதற்காகவே காத்திருந்த நிருபர்களும் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். யானையாரின் உதவியாளர் ஒவ்வொருவராகக் கேள்வி கேட்கப் பணித்தார்.

''சார், இந்தக் கூட்டத்திற்கு அப்புறமும் காட்டுக் கோப்பை போட்டிக்கு நீங்களேதான் நடுவரா?''

''நடுவரா இருந்தாலும் இருக்கலாம். ஓரமாயிருப்பவராய் இருந்தாலும் இருக்கலாம்.''

''போட்டி விதிமுறையில் என்னென்ன மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கீங்க?''

''போட்டி நடத்தணும்னாலும் நடத்தலாம். அல்லது யாருக்கு எதுல மெடல் வேணுமோ, அதை எல்லாரும் ஒத்துக்கிட்டால் கொடுத்திடலாம்.''

''உங்க பதில் என்னவோ மாதிரியிருக்கே. மீட்டீங்கில் எக்கச்சக்க டென்ஷனா?''

''டென்ஷனா இருந்தாலும் இருக்கலாம். ரிலாக்ஸா இருந்தாலும் இருக்கலாம்.''

குழப்பமான பேட்டியை முடித்துக் கொண்டு நிருபர்கள் பறந்தனர். சிப்ஸ் மென்று கொண்டிருந்த சிங்கராஜா தனது திட்டப்படியே காட்டுக் கோப்பையில் குழப்பம் விளைந்தது குறித்து சந்தோஷப்பட்டார். 'யாராவது திறமையைக் காட்டி ஜெயித்து விட்டால்? பிறகு ஆட்சி அதிகாரம் போன்றவற்றிற்குப் போட்டி வந்து விட்டால்? அதனால் எவ்வித போட்டியும் காட்டில் நுழையக் கூடாது' என தனது திட்டப்படியே எல்லாம் நடந்தது கண்டு மகிழ்ந்தார்.



• ஸ்டீவ் வாஹ்

டெஸ்ட். இதுவே ஒரு சாதனைதான்! வேறு எந்த ஆஸ்தி ரேலியரும் இத்தனை டெஸ்ட் போட்டிகள் விளையாடிய தில்லை. ஸ்டீவ் வாஹ் 60 ரன்களைக் கடந்தபோது சுனில் கவாஸ்கரின் சாதனையை முறியடித்தார்.

கவாஸ்கர் 10,122 ரன்கள் குவித்து அதிக ரன் குவித்த இரண்டாவது பேட்ஸ்மேன் என்ற பெருமை யைப் பெற்றிருந்தார். கவாஸ்கரைக் கடந்ததன் மூலம் ஸ்டீவ் வாஹ் அந்தப் பெருமையைப் பெற்றுவிட்டார். 11,174 ரன்கள் குவித்து முதல் இடத்தில் இருக்கிறார் ஆஸ்திரேலிய முன்னாள் கேப்டன் ஆலன் பார்டர்.

நிதானமாக விளையாடி சதத்தை அடித்ததன் மூலம் தனது 30வது டெஸ்ட் சதத்தைப் பூர்த்தி செய்தார் வாஹ். இதன் மூலம் மறைந்த சர் பிராட்மேன் சாதனையையும் முறியடித்தார்.

இப்படி ஒரே நாளில் பல சாதனைகளைச் செய்து ரசிகர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார் ஸ்டீவ் வாஹ்.

''கவாஸ்கர் சாதனையை முறியடித்து, அதிக ரன்கள் குவித்த இரண்டாவது வீரர் என்ற பெயர் எடுத்திருப்பது சந்தோஷம்தான். ஆனால் யாராலும் முடியாத பெரிய சாதனை படைத்து விட்டதாக நான் நினைக்கவில்லை. டெஸ்ட் போட்டிகளில் 30 சதங்கள் அடித்ததன் மூலம், பிராட்மேனை மிஞ்சி விட்டதாக நினைக்கவில்லை.

# சாதனை படைத்தார் ஸ்டீவ் வாஹ்!

ஆஸ்திரேலிய – மேற்கிந்தியத் தீவுகளுக்கு இடையே நடைபெற்ற மூன்றாவது டெஸ்ட் போட்டியில் ஸ்டீவ் வாஹ் பல சாதனைகளைப் படைத்தார். கிரிக்கெட் சாதனையாளர் பிராட்மேன் மற்றும் கவாஸ்கர் சாதனை களை டெஸ்ட் அணி கேப்டன் ஸ்டீவ் வாஹ் முறியடித்தார். டெஸ்ட் போட்டிகளில் அதிக ரன் கள் குவித்த இரண்டாவது வீரர் என்ற பெருமையை யும் அவர் பெற்றார். இது அவருக்கு 159வது

52 டெஸ்ட்களில் அவர் செய்ததை நான் 159 டெஸ்ட்களில் செய்திருக்கிறேன். இந்தச் சாதனையை என்னிடமிருந்து ஒரு நாள் ரிக்கி பான்டிங் எடுத்துக் கொள்வார் என்பது நிச்சயம்'' என்று தன்னடக்கத்துடன் கூறுகிறார் ஸ்டீவ் வாஹ்.

49 டெஸ்ட் போட்டிகளுக்குத் தலைமை ஏற்று 36 ஆட்டங்களில அணியை வெற்றிக்கு அழைத்துச் சென்றுள்ளார் ஸ்டீவ் வாஹ் என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கிந்தியத் தீவுகள் – ஆஸ்திரேலியாவுக்கு இடையில் நடைபெற்ற டெஸ்ட் போட்டிகளில் ஆஸ்திரேலியா தொடரைக் கைப்பற்றிக் கொண்டது.

தென்னாப்பிரிக்கா - பங்களாதேஷ் அணிகளுக்கு இடையேயான டெஸ்ட் தொடரில் தென்னாப்பிரிக்கா தொடரை வென்று விட்டது.

*விளையாட்டு அரங்கம்*



# ரோஸ் நிற யானை!

ஒருவர் வீட்டில் எலித் தொல்லை அதிகமாக இருக்கவே, எலியைக் கொல்ல கடையில் விற்கும் விஷத்தை வாங்கிக் கொண்டு வந்து, சாதத்தில் கலந்து வைத்து, எலிகளைக் கொல்லத் திட்டமிட்டார். கடைக்குப் போய் எலி மருந்து வேண்டும் என்று கேட்டார். அந்தக் கடைக்காரப் பையன் வேலைக்குப் புதிது மட்டுமல்ல; இதற்கு முன் ஹோட்டலில் வேலை பார்த்தவன். எனவே பழக்க தோஷத்தில் கேட்டான்: ''எலி மருந்து இங்கே சாப்பிடவா? பார்சலா?''

''உங்க வீட்டுக் கூரை எப்போதுமே ஒழுகுமா?''
''இல்லை. மழை பெய்தால்தான் ஒழுகும்.''

''தனது அறுபதாவது பிறந்த நாளன்று, 'நடந்தால் உடம்புக்கு நல்லது' என்று ஒரு டாக்டர் நண்பர் ஆலோசனை சொன்னதன் பேரில் தினம் இரண்டு மைல் நடக்க ஆரம்பித்தார் என் தாத்தா. இன்று அவரது எழுபதாவது பிறந்த நாள்.''
''ஓ! தாத்தா எப்படி இருக்கிறார்?''
''யாருக்குத் தெரியும்? அறுபதாவது பிறந்த நாளன்று புறப்பட்டவரை அப்புறம் நாங்கள் பார்க்கவே இல்லையே!''

''ஆரம்பித்த காரியத்தை முழு ஈடுபாட்டுடன் செய்து முடித்து விட்டுத்தான் அடுத்த வேலையை ஆரம்பிக்க வேண்டும். என்ன புரிந்ததா? போய் ஒழுங்காகப் படி'' என்றார் அப்பா.
உடனே பையன் சொன்னான்:



''அப்படியே கண்டிப்பாகச் செய் கிறேன். முதலில் நான் சாப்பிட எடுத்து வைத்திருக்கும் சிப்ஸ் பாக்கெட்டைக் காலி பண்ணிவிட்டு, அப்புறம் படிக்கப் போறேன்!''

அந்த நகரத்தின் நடுப்பகுதியில் பெரிய மரத்தின் கீழே ஒரு சலவைக் கல். எப்போதும் அதைப் படிக்க ஒரு கூட்டம் அங்கே நின்று கொண்டு இருக்கும். அப்படி என்ன அங்கே எழுதப்பட்டிருந்தது என்று கேட்கிறீர்களா?

'இதே இடத்தில் 1940ம் ஆண்டு ஜூன் மாதம் நாலாம் தேதி பகல் பன்னிரெண்டு மணிக்கு எதுவும் நடக்கவில்லை!'

இந்த யானையை உற்றுப் பாருங்கள். இது போல ஒரு யானை இருக்க முடியா தில்லையா? ஆமாம்! இது போல ஐந்து கால் யானையை எப்படி பார்க்க முடி யும்?

ஒரு ராஜா, குதிரையில் தன் காவ லர்கள் பின் தொடர நகர வீதிகளில் போய்க் கொண்டு இருந்தார். எதிரில் வந்த ஒரு தாடி வளர்த்த முதியவரிடம், ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்க, ''எனக்குத் தெரியாது?'' என்று பதில் சொன்னார்.

மீண்டும் ராஜா அதே கேள்வியைக் கேட்க, முதியவரிடமிருந்து அதே பதில்.

ராஜாவுக்குக் கோபம் வந்துவிட்டது.

''இந்தக் கிழவரைச் சிறையில் அடை யுங்கள்'' என்று உத்தரவிட்டார்.

காவலர்கள் முதியவரைக் கைது செய்து சிறையில் அடைத்து விட்டார்கள். அன்று இரவு சிறைச் சாலையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்த ராஜா, காலையில் கைது செய்யப்பட்ட முதியவரிடம் வந்தபோது, ''காலையில் என் கேள்விக்கு ஏன் திமிராக 'எனக்குத் தெரியாது' என்று பதில் சொன்னீர்கள்?'' என்று கேட்டார்.

முதியவர் பதில் சொன்னார்: ''நான் திமிராகப் பதில் சொல்லவில்லை. நிஜத் தைத்தான் சொன்னேன். அந்த இடத்தில் கைதாகி, நான் சிறைக்குக் கொண்டு வரப் படுவேன் என்பது எனக்கு எப்படி தெரியும்? அதனால்தான் 'தெரியாது' என்று பதில் சொன்னேன்'' என்று முதியவர் சொல்ல, முதியவர் வாதத்தில் நியாயம் இருப்பதைக் கண்டு, உடனடியாக அவரை விடுதலை செய்தார் ராஜா.

கென்யா நாட்டில் ரோஸ் நிறத்தில் யானைகளைப் பார்க்கலாம்! அட! அப் படியா? என்று ஆச்சரியமாகப் பார்க்கிறீர் களா? அந்த ஊரிலும் யானைகள் கறுப்பு தான். ஆனால் அந்த ஊரின் மண் ரோஸ் நிறத்தில் இருக்கும். எனவே, மண்ணில் புரண்டு விளையாடுவதால் ரோஸ் நிறச் சேறு உடம்பில் ஒட்டிக் கொள்ள, யானையே ரோஸ் நிறமாகத் தெரிகிறது!

பின்லாந்து நாட்டின் தலைநகரான ஹெல்சிங்கியில், வாகனங்களை நிறுத்தக் கூடாத இடங்களில் நிறுத்தினால் அபராதம் விதிப்பதில்லை. பதிலாக, அந்த வாகனத்தின் டயர்களிலிருந்து, காற்றை வெளியேற்றி விடுவார்கள்!

- எஸ். சந்திரமௌலி

## அழ. வள்ளியப்பா நினைவு சிறுகதைப் போட்டி

சென்ற இதழில் அறிவித்திருந்த சிறுகதைப் போட்டிக்குக் கதைகளை எழுதி அனுப்ப ஆரம்பித்து விட்டீர்களா? விரைவாக எழுதி அனுப்புங்கள். 31.5.2003க்குள் அனுப்ப வேண்டும் என் பதை மறந்து விடாதீர்கள். வாழ்த்துகள்!

# முட்டாள்கள் பட்டியல்! – பிரசாத்






















அக்பர் பண முடிப்பை வாங்கினார்.


அதைக் குதிரை வியாபாரியிடம் கொடுத்தார்.
இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு குதிரைகளை எனக்குக் கொடுங்கள்.


வியாபாரி சென்றான்.
பீர்பால், நம்ம இராஜ்ஜியத்தில் உள்ள முட்டாள்களின் பட்டியலைக் கேட்டிருந்தேனே?
பட்டியல் தயாராக இருக்கிறது. இன்னும் ஒரு பெயரைச் சேர்த்து விட்டுத் தருகிறேன்.


சீக்கிரம் எழுதிக் கொடுங்கள். பட்டியலைப் பார்க்க ஆவலாக இருக்கிறேன். ஹா...ஹா...


பீர்பால் உடனே பெயரை எழுதினார்.













e-mail: prasadiyer2000@yahoo.co.uk






என். சுந்தரராமன்

நாட்டில் உள்ள பள்ளியைப் போல்
நமக்கும் ஒன்று வேண்டுமெனக்
காட்டின் ராஜா கட்டளையால்
கானகப் பள்ளியைத் திறந்தாராம்.

யானைப் பெரியவர் ஹெட்மாஸ்டர்
காண்டாமிருகர் உதவிக்காம்;
ஓநாய், கரடி, சிறுத்தையுடன்
உறுமும் புலியும் டீச்சர்களாம்.

எலியார் முதலில் பள்ளிவர
எதிரே பூனைக் குட்டி வர
எலியார் பயந்து குட்டியுடன்
எங்கோ சென்று பதுங்கியதாம்

மானார் தமது குட்டிகளை
மகிழ்ச்சியோடு கூட்டிவர
ஓநாய் டீச்சர் தனைப் பார்த்து
ஓடிப் புதரில் மறைந்ததுவாம்.

ஆட்டுக்குட்டிகள் ஆவலுடன்
அந்தப் பள்ளியில் சேர வர
கோட்டுப் போட்ட கரடியினைக்
கண்டதும் கம்பியை நீட்டியதாம்.

குரைக்கும் நாயைக் கண்டவுடன்
குட்டிப் பூனை பாய்ந்தோட
நரியைக் கண்டு முயல்குட்டி
நாற்கால் பாய்ச்சலில் ஓடியதாம்.

சிறுவர் எவரும் இல்லாமல்
திறந்த பள்ளி என் செய்யும்?
திறந்த அன்றே மூடுவிழா
சிறந்த முறையில்
நடந்ததுவாம்!





இது போன்று அல்லல்படும் மக்களுக்கு யார் துணை? அவர்களுக்குக் கை கொடுக்க யாருமே இல்லையா?" நினைக்க நினைக்க வேதனை அவரை அள்ளிக் கொள்ளும். நாளும் பொழுதும் இதே சிந்தனை ஓட்டம்தான். காலையில் எழுந்ததிலிருந்து பிரார்த்தனை, மத சம்பந்தமான படிப்பு. அப்புறம் பள்ளிக்குச் சென்று ஆசிரியை வேலை, மாலை விடுதி திரும்பியவுடன் மீண்டும் பிரார்த்தனை. இப்படியாகத் தினசரி வாழ்க்கை சுற்றிக் கொண்டிருந்தது அந்தப் பெண் துறவிக்கு.

இந்த நிலையில் தான் ஒருமுறை டார்ஜிலிங் மலைப் பகுதிக்கு ரயிலில் சென்று கொண்டிருந்தார் அவர். பசுமை சூழ்

# தொண்டு செய்யப் பிறந்தவர்!

கல்கத்தாவில் எண்டாலி என்ற பகுதியில் இருந்தது அந்தக் கிறித்துவ பெண் துறவிகளின் மடம். அந்த மடத்தை அடுத்து பெரிய சேரிப் பகுதி. தனது அறையிலிருந்து தினசரி அந்தச் சேரிப் பகுதியைப் பார்த்தபடி இருப்பார் ஒரு கிறித்துவ பெண் துறவி. 'அவர்கள் வாழும் சுகாதாரமற்ற சூழ்நிலை, அதனால் ஏற்படும் நோய்கள், பள்ளிக்குச் செல்லாத சிறுவர், சிறுமியர், குடித்துவிட்டு மனைவியை அடித்துச் சித்ரவதை செய்யும் ஆண்கள், வெள்ளம் வந்தால் தண்ணீர் குடிசைகளுக்குள் புகுந்து விடும் அபாயம், அதனால் ஏற்படும் துன்பங்கள்'... இப்படி சேரி வாழ் மக்களின் அன்றாட வாழ்க்கைப் போராட்டங்களை மனதுக்குள் உள் வாங்கிக் கொள்ளும் அப் பெண் துறவிக்குச் சோகம் நெஞ்சை அடைக்கும். "கடவுளுக்குச் சேவை செய்யத் தான் நாம் இருக்கிறோமா?

மலைகள், சிகரங்களில் பனித் தொப்பிகள், வெள்ளிக் கம்பியாய் கொட்டும் அருவிகள், சரியான பச்சை சதுரங்களாகத் தேயிலைத் தோட்டங்கள், அதில் உயர்ந்து நிற்கும் ஓக் மரங்கள். இப்படி எதிலும் மனம் ஒட்டாத வராகப் பயணம் செய்து கொண்டிருந்தார் அவர். அப்போதுதான் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. யார் என்று தெரியவில்லை; குரல் மட்டும் தெளிவாகக் கேட்டது. "உன் உடைமைகளை உடனே துறக்க வேண்டும், ஏழைகளுக்குச் சேவை செய்ய வேண்டும்; உடனே செய்ய வேண்டும்" என்று இதயத்தில் விழுந்த அந்தக் குரல், உயரே சென்று மூளையில் பதிந்துவிட்டது. ஒரு நிமிடம் வியர்த்துவிட்டது அவருக்கு. 'ஓ! இது ஆண்டவன் இயேசுவின் கட்டளையல்லவா!' உள்ளமும் உடலும் புத்துணர்ச்சியைப் பெற்றது.

அடுத்த நாளே கல்கத்தா திரும்பிய அந்தப் பெண் துறவி, ஆசிரியை வேலையை ராஜினாமா செய்தார். இது நடந்தது 1946ம் வருடம், செப்டெம்பர் மாதம். தன் மனதில் பதிந்துவிட்ட சேரிப் பகுதியிலிருந்து சேவையைத் துவக்க விரும்பினார் அவர். அவர் சார்ந்திருந்த மடம் அனுமதி கொடுத்தது. முதலில் ஒரு மேஜை நாற்காலியோடு பள்ளி ஆரம்பிக்கப்பட்டது. அப்போது அந்தத் துறவியிடம் இருந்தது ஐந்து ரூபாய் எழுபத்தைந்து காசு மட்டும்தான். ஆனால் உள்ளத்திலோ ஓர் உன்னதமான லட்சியமும், அதைச் செய்து முடிக்கும் வைராக்கியமும் முழுமையாகக் குடி கொண்டிருந்தன. அக்னேஸ் கோங்ஸா பொஜாஹியூ என்ற அந்தப் பெண் துறவி மதர் தெரஸா என்ற பெயரில் உலகில் அறிமுகமாகி, லட்சக்கணக்கான ஆதரவற்ற சிறுவர்களுக்கும் முதியோர்களுக்கும் அன்னையாய் வாழ்ந்து மறைந்தது இப்போது சரித்திரத்தில் நிலைத்து விட்ட ஒன்று.

**சே**வையின் இமயமாக உயர்ந்து நின்ற தெரஸா அம்மையார் பிறந்தது யூகோஸ்லோவியா நாட்டில் வசித்து வந்த அல்பேனியப் பெற்றோருக்கு. அப்பா மளிகைக் கடை வைத்திருந்தார். மூன்று பெண்கள். முதல் உலகப் போர் தனது கோர முகத்தை அந்தக் குடும்பத்தின் மீதும் காட்டிவிட்டது. தந்தையின் மரணம் தாய்க்குப் பொறுப்பை ஏற்றிவிட்டது. மூன்று குழந்தைகளையும் கண்ணாகப் போற்றி வளர்த்தார் அந்தத் தாய். ரோமன் கத்தோலிக்க குடும்பம். அதனால் மதப்பற்றும், பிரார்த்தனைகளும் தீவிரமாக இருந்தன. சிறு வயதிலிருந்தே இந்தியாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார் தெரஸா. அதிலும் குறிப்பாக டார்ஜிலிங் மலைப் பகுதிகளில் கிறித்துவ பெண் துறவிகள் மக்களுக்கு நிறைய சேவைகள் செய்து வருவதை இந்தியாவிலிருந்து திரும்பிய ஒருவர் சொன்னபோது, தானும் அது போன்ற சேவையில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணம் துளிர்த்தது. தெரஸாவுக்குப் பதினெட்டு வயதானதும் டப்ளின் என்ற இடத்திலிருந்த கிறித்துவ பெண் துறவிகளுக்கான மடத்தில் பயிற்சி பெற சேர்ந்து விட்டார். அங்கு சரியாக ஒரு வருடம். அதற்கடுத்த வருடத்தில் மனதில் பதிந்துவிட்ட இந்தியாவிற்குள் காலடி எடுத்து வைத்தார். அவர் சார்ந்திருந்த அந்தக் கிறித்துவ மடம் கல்கத்தாவில் பள்ளி நடத்திக் கொண்டிருந்தது. அந்தப் பள்ளியில் புவியியல் ஆசிரியையாகப் பொறுப்பேற்றார். எண்டாலிப் பகுதியில்தான் அந்தப் பள்ளி இருந்தது.

அந்தப் பள்ளி கிறித்துவ மடாலயம் நடத்தியப் பள்ளி என்றாலும், அங்கே எல்லா சமூகங்களைச் சேர்ந்தவர்களும் படித்து வந்தனர். அக்னேஸ் டீச்சர் என்றால் மாணவ, மாணவியருக்கு மிகவும் பிடிக்கும். கைகளில் பிரம்பில்லாத ஆசிரியை அவர். பாடங்களைக் கதை போலச் சொல்லுவார். "அன்புள்ள சிறுவர், சிறுமிகளே... உங்களுக்கு நான் ஒன்றை முக்கியமாகச் சொல்ல விரும்புகிறேன். சிறிய வயதில் உங்களுக்கு ஏற்படும் நல்ல பழக்கங்களே உங்களை எதிர்காலத்தில் செழுமைப் படுத்தும். எனவே நல்லதை எண்ணுங்கள்... நல்லதைச் செய்யுங்கள். நல்ல சினேகிதம் கொள்ளுங்கள். நல்ல ஆப்பிள் பழங்கள் இருக்கும்



கூடையில் ஓர் அழுகிய பழமும் கலந்து விட்டால், சில நாட்கள் கழித்துப் பார்த்தால் நல்ல ஆப்பிள்களும் அழுகிப் போயிருக்கும். எனவே நல்ல பழக்க வழக்கங்கள் உள்ளவர்களோடு தோழமையாகப் பழகுங்கள். உங்கள் நண்பர்கள் வட்டாரத்தைக் கெடுக்க மோசமான ஒருவனே போதும். எனவே நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் எச்சரிக்கையாக இருங்கள்'' - இது ஆசிரியை அக்னேஸ் அடிக்கடி மாணவ மாணவியருக்குச் சொல்வது. படிப்பை விட முக்கியமாகக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தி போதித்தது ஒழுக்கத்தைப் பற்றிதான்.

''ஒரு மனிதனை உயர்த்துவது அவர் கடைபிடிக்கும் ஒழுக்கம்தான். வாழ்க்கையில் அதை இழந்து விட்டால் பின்னர் வாழ்வதில் பயனில்லை'' என்று சொல்லுவார். கிறித்துவ மடாலயத்தில் பயிற்சி பெற்ற துறவியென்றாலும், பல சமூகத்து சிறுவர், சிறுமியர் பயின்று வந்த பள்ளியில், ஒருபோதும், ஆசிரியை அக்னேஸ் மதப் பிரச்சாரம் செய்தது கிடையாது. ஆனால் கிறித்துவ சமூகத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் தேவாலயங்களுக்கு முறையாகச் சென்று பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று வலியுறுத்துவார். ''நம்மைப் பண்படுத்துவதில் பெரும்பங்கு கடவுளுக்கு இருக்கிறது. எனவே நீங்கள் எந்த மதமாக இருந்தாலும் பிரார்த்தனை செய்யுங்கள். அதனால் உங்களுக்கும் நீங்கள் சார்ந்திருக்கும் சமூகத்துக்கும் நிச்சயமாக பலன் உண்டு'' என்று திரும்பத் திரும்பச் சொல்லுவார் அக்னேஸ்.



மிகச் சிறிய அளவில் துவங்கிய அன்னை தெரஸாவின் பணி ஆலமரமாய் பல்கிப் பெருகிய வரலாறு என்பது ஒரே மாதத்திலோ அல்லது ஒரு வருடத்திலோ நடந்ததல்ல; ஒவ்வொரு கட்டத்திலும் சந்தித்த சோதனைகள் கணக்கில் அடங்காது. ஆனால் அது போன்ற சோதனையான கட்டங்களில், தெரஸாவின் பரிசுத்தமான சேவை மனப்பான்மை மட்டுமே அடையாளம் காணப்பட்டு, கை கொடுத்தது. 'ஏழையாக வாழ்ந்து காட்டினால்தான் ஏழையின் மீது அன்பு செலுத்தவும் அவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் முடியும்' என்று நம்பினார் தெரஸா. சமூகப் பணியில் குதித்தவுடன், துறவிக்கான நீண்ட உடையை அணிவதை விட்டு நீலக் கரையுடன், வெள்ளைச் சேலைக்கு மாறினார். எளிய உணவுப் பழக்கங்கள், உள்ளூர் மொழியைத் தெரிந்து கொண்டது போன்றவை, மக்களை இன்னமும் அவருக்கு நெருக்கமாக்கிக் கொள்ள உதவின. அக்னேஸ் தெரஸாவானது எப்படி? ஃபிரான்ஸிஸ் தெரஸா மார்ட்டின் என்ற பெண் துறவி இருந்தார். அவர் 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்று தொண்டாற்றி வந்தார். அவரது பணியால் மிகவும் கவரப்பட்ட அக்னேஸ் தன்னையும் தெரஸாவாக மாற்றிக் கொண்டார்.

அன்னை தெரஸா துவக்கி வைத்த சேவை ஸ்தாபனங்கள் இன்று உலகம் முழுக்க இருக்கின்றன. ''ஒவ்வொரு மனிதனும் பிறந்தான், வாழ்ந்தான், மறைந்தான் என்றில்லாமல், தான் வாழும் காலத்தில் சுற்றியுள்ள எத்தனை பேருக்கு ஊன்றுகோலாய் இருந்திருக்கிறான் என்பதைப் பொறுத்தே இறுதியாக அவனை கடவுள் ஏற்றுக் கொள்கிறாரா என்பது தெரிய வரும்'' என்று சொல்வார் தெரஸா. அந்த வகையில் பார்த்தால் அன்னை தெரஸா சேவை தெய்வமாகவே உயர்ந்து விட்டார் என்று சொல்லலாம்.

- ப்ரியன்



# ருசிக்கேற்ற தீர்ப்பு!

ரங்கன் ரொம்ப நல்லவன். அவனிடம் இரண்டு பசுக்களும், ஒரு எருமையும் இருந்தன. நியாயமாகப் பால் விற்று மேலும் மாடுகள் வாங்கினான். தன் நிலத்தில் கீரை பயிரிட்டு மாடுகளுக்குப் போடுவான். தினமும் புற்கட்டுகள் வாங்கிக் கொடுப்பான்.

அவனது தெருவிலேயே வசித்த குப்புசாமி பத்து மாடுகள் வைத்திருந்தான். அவன் சற்று வசதியானவன். மாடுகளுக்கு வைக்கோலும், கழுநீரும் தவிர வேறு எதுவும் தர மாட்டான். சரியான கஞ்சன். எள்ளும் பிண்ணாக்கும் வைத்தால் பால் நிறையக் கறக்கும் என்று கழுநீரில் எள்ளுப் பிண்ணாக்கை ஊறவைத்துக் கொடுப்பான்.

ரங்கனோ பருத்திக் கொட்டையை ஊறவைத்து அதில் தேங்காய்ப் பிண்ணாக்கும், கடலைப் பிண்ணாக்கும், தவிடும் கலந்து வைப்பான். அதனால் அவனது மாடுகளின் பால் கெட்டியாகவும், ருசியாகவும் இருந்தன. அவனிடம் பால் வாங்க வாடிக்கையாளர்கள் குவிந்தார்கள்.

குப்புசாமியின் மாடுகளில் நான்கு நோய் கண்டு மடிந்தன. அவன் ரங்கனிடம், "என் மாடுகள் ஆறையும் நீ சில நாட்கள் பராமரித்து வருவாயா? மனமே சரியில்லை. குடும்பத்தோடு தீர்த்த யாத்திரை சென்று வருகிறேன்" என்று கேட்டான்.

ரங்கனும் முழு மனதோடு இதற்கு ஒப்புக் கொண்டான். குப்புசாமியின் மாடுகளையும் நன்கு குளிப்பாட்டி தன் மாடுகளுக்கு வைப்பது போலவே தீவனம் வைத்தான். மாடுகள் உடல் தேறித் தெம்பாய் இருந்தன. ஆனாலும் ரங்கனின் மாடுகளுக்கு இணையாகப் பால் தரவில்லை!

இரண்டு மாதங்கள் சென்ற பிறகு குப்புசாமி ஊரிலிருந்து வந்தான். ரங்கனிடம், "உன் உதவியை என்றும் மறக்க மாட்டேன். என் மாடுகளை ஓட்டிச் செல்லட்டுமா?" என்று கேட்டான்.

"தாராளமாகப் பத்திச் செல்" என்று புன்முறுவலோடு கூறினான் ரங்கன். மாட்டுக் கொட்டிலுக்குப் போன குப்புசாமி, தன் ஆறு மாடுகளைப் போலவே நிறம் கொண்ட ரங்கனின் ஆறு மாடுகளைக் கட்டவிழ்த்தான்.

ரங்கன், "மாடுகளை அடையாளம் தெரியவில்லையா? இதோ இருக்கின்றன உன் மாடுகள்" என்று குப்புசாமியின் பசுக்களை அடையாளம் காட்டினான்.

குப்புசாமி ரங்கனின் நல்ல மாடுகளை மாற்றிக் கொள்ளவே திட்டம் போட்டிருந்ததால், ரங்கனின் பசுக்களையே தன் மாடுகள் என்று சாதித்தான். இருவருக்கும் வாக்குவாதம் வலுத்தது. குப்புசாமி மாடுகளை ஒப்படைத்துச் சென்றவனாதலால், அவனிடமே குற்றம் இருப்பதாக அனைவரும் கருதினர். முடிவில் வழக்கு அரசவைக்குச் சென்றது.



அரசர் வழக்கை விசாரித்தபின் குழப்பமாயிருக்கிறதென்று நீதிபதியிடம் ஒப்படைத்தார். நீதிபதி இருவர் வாக்குமூலங்களையும் பொறுமையாகக் கேட்டார்.

இருவரையும் தனித்தனியாக அழைத்து மாடுகளுக்கு என்ன தீவனம் போடுவீர்கள் என்று கேட்டுத் தெரிந்து கொண்டார். ரங்கனின் ஆறு பசுக்களையும், குப்புசாமியின் மாடுகளையும் தனித் தனியே கட்டி வைத்து அவர்கள் சொன்னபடி தீவனம் கொடுத்தார்.



நீதிபதி கூறியபடி மூன்று நாட்கள் கழித்து இருவரும் வந்தனர். இருவரும் விருந்து சாப்பிட்ட பின் தீர்ப்புக் கூறுவதாகச் சொன்னார் நீதிபதி. இருவருக்கும் தனித் தனியே விருந்து பரிமாறப்பட்டது.

ரங்கனின் அறையில் அரசரும், குப்புசாமியின் அறையில் மந்திரியும் கண்காணித்தனர். ரங்கனிடம், "விருந்தின் சிறப்பை ரகம் பிரித்துச் சொல்ல முடியுமா?" என்று நீதிபதி கேட்க, ரங்கன், "கீரை சாப்பிட்ட மாட்டின் பால் கொண்டு பாயசம் தயாரிக்கப்பட்டிருந்தது. தேங்காய்ப் பிண்ணாக்கை உண்ட





பசுவின் தயிர் எனக்குத் தரப்பட்டிருந்தது. கடலைப் பிண்ணாக்கைத் தீவனமாகப் போட்ட மாட்டின் நெய்யை எனக்கு ஊற்றினார்கள். தவிடும், புல்லும் மட்டுமே சாப்பிட்ட மாட்டின் சாணத்தால், வறட்டி தட்டி சமைக்கும் போது அடுப்பெரித்திருக்கிறார்கள்" என்று மடமடவென்று சொன்னான்.

அவனது ருசி அறியும் திறமை அரசரை 'சபாஷ்' போட வைத்தது. அடுத்து குப்புசாமியிடமும் அதே கேள்வியைக் கேட்டார் நீதிபதி.

"நன்றாகக் காய்ச்சாத பால், ஆதலால் தயிர் சரியாக உறையவில்லை! குடையும், நீருமாய் இருக்கிறது. பாயசப் பாலில் அடிபிடித்த நாற்றம் வருகிறது! கழுநீர் விட்டு வளர்த்த கீரை மாதிரி கீரையில் ஒரு ருசியும் இல்லை. திருப்தியாய்ச் சாப்பிட்டு விட்டேனா! வைக்கோற்படப்பு நிழலில் கயிற்றுக் கட்டிலைப் போட்டு ஒரு தூக்கம் போடலாம் போலிருக்கிறது! வைக்கோலையும் எவனும் களவாட மாட்டான், பாருங்கள்!" என்றான் குப்புசாமி.

நீதிபதி அவரவர் மாடுகளை அவரவரிடம் ஒப்படைத்து, அடுத்தவன் பசுவைத் தன் பசு என்று சொன்ன குப்புசாமிக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார். குப்புசாமி தலை கவிழ்ந்தபடி அபராதத்தைக் கட்டினான்.

அரசர் வியப்புடன் நீதிபதியிடம், "எப்படி கண்டுபிடித்தீர்கள்?" என்று கேட்டார். "குப்புசாமி சுகவாசி. குற்றம் கண்டுபிடித்துச் சொகுசாக வாழ்ந்திருக்கிறான். அடுத்தவன் ஏமாற்றுவான் என்ற எண்ணம் பேச்சில் தெரிகிறது. எள்ளுப் பிண்ணாக்கைச் சாப்பிடும் பசு பால் நிறையத் தரும். ஆனால் தயிர் கெட்டியாக இராது. ரங்கன் பொறுப்பானவன்; உண்மையானவன். விருந்து சாப்பிடும்போதே தீர்ப்புக்கும், விருந்துக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று யூகித்துக் கூர்ந்து சுவைத்திருக்கிறான். லட்சியவாதி தவறு செய்ய மாட்டான்" என்று நீதிபதி கூறவும் அரசர் மகிழ்ந்து நீதிபதிக்குப் பரிசளித்துப் பாராட்டினார்.



## ஊனத்தை வென்றவர்கள்!

உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானியான தாமஸ் ஆல்வா எடிஸன் தனது பன்னிரண்டாவது வயதிலேயே இரு காதுகளும் கேட்கும் திறனை இழந்து விட்டார். அதன் பிறகே 1100 கண்டுபிடிப்புகளை உலகிற்கு அளித்த பெருமைக்குரியவரானார்.

பீத்தோவன் எனும் சங்கீத மேதையும் காது கேளாதவராகவே வாழ்ந்தவர்.

பல்லாயிரக்கணக்கான கவிதைகளை இயற்றிய மில்டன் என்ற ஆங்கிலக் கவிஞர் குருடராக வாழ்ந்தவர்.

பார்வையற்றோருக்கான பிரத்யேக 'பிரெய்ல் முறை'யை அளித்தவர் ராபர்ட் பிரெய்லி என்ற பார்வையற்றவரே!

◆ தனது முப்பத்தொன்பதாவது வயதில் பக்கவாத நோய் தாக்கி வலது கால் முழுவதும் செயலிழந்து போனவர் ஃபிராங்க்ளின் ரூஸ்வெல்ட். அவர் பதினோரு ஆண்டுகள் கடுமையான உடற்பயிற்சி மேற்கொண்டு ஊன்றுகோல் உதவியுடன் தானே நடக்கும் அளவிற்கு முன்னேறி ஐம்பதாவது வயதில் அமெரிக்க ஜனாதிபதியாகவே ஆகிவிட்டார்.

- குட்டி பிரசன்னா, கரூர்.





# குறுக்கெழுத்துப் புதிர்!

**இடமிருந்து வலம்**

1. தீபாராதனை இவற்றால் காட்டப்படுகிறது (5).

2. விசேஷங்களின்போது இதைத் தெளித்து வரவேற்பர் (4)

3. பேருந்து (2)

5. ஆற்றின் குறுக்கே நீரைத் தேக்கி வைப்பது ________ (2)

11. ரோஜாச் செடிக்கு இது பாதுகாப்பு (2)

14. சொம்பு நிறைய இரத்தினங்கள் உடையது ________ பழம் (4)

**வலமிருந்து இடம்**

7. சிக்கனமாக இருக்கலாம்; ஆனால் ________ ஆக இருக்கக் கூடாது (4).

9. கண்ணகியின் கணவன் (4)

12. இதை வாசிக்க, வாசிக்க அறிவு விரிவடையும் (2).

17. இந்தப் பழத்தில் பானம் தயாரிக்கலாம், ஊறுகாய் போடலாம் (5).

**மேலிருந்து கீழ்**

1. மான் தரும் வாசனைப் பொருள் (4)

2. இதற்கு எதிர்ப்பதம் இரவு (3)

8. எலி ________ தோண்டி வாழும் (2)

13. இதை ஆங்கிலத்தில் கார்ன் என்று அழைப்பார்கள் (3)

**கீழிருந்து மேல்**

4. மின்னலால் மலரும் பூ (4)

5. ________ புல் சாறு உடலுக்கு நல்லது (4)

6. வளையம் உடைய கோள் (2)

7. கிரிக்கெட் வீரர் ரோஹனின் தந்தை. இவரும் பிரபல கிரிக்கெட் வீரர் (5).

9. வீட்டுப் பறவை. பறந்து செல்லாது (2)

10. ________, எதற்கு, எப்படி? என்று கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்வது நல்லது (2)

14. நரசிம்மவர்ம பல்லவரின் இன்னொரு பெயர் (5).

15. சீனாவில் இந்த இருசக்கர வாகனம் அதிகம் பயன்படுத்தப்படுகிறது (4)

16. சாக்லேட் (4)

17. பிரமிடுகளின் தாயகம் (4)

- கி. ஜனனி, தஞ்சாவூர்

விடை 64ஆம் பக்கம்

# மறக்க முடியவில்லை....

## செலவு

அப்பா, அம்மா, நான் மூவரும் அரக்கோணத்திலிருந்து காஞ்சிபுரம் மற்றும் சுற்றியுள்ள கோவில்களை எங்கள் ஸ்கூட்டரிலேயே சுற்றிப் பார்க்கச் சென்றோம். அது திருவிழாக் காலம். எல்லாக் கோவில்களிலும் நல்ல கூட்டம். காலணிகளைப் பாதுகாக்கும் இடத்தில் வைப்பதற்கும், திரும்பி வந்து வாங்குவதற்குமே நேரம் சரியாக இருந்தது. எனவே அப்பா



ஸ்கூட்டரின் சைட் பாக்ஸில் எங்கள் காலணிகளை வைத்தார். ஒரு கோவிலுக்குச் சென்று திரும்பி வந்து பார்த்தபோது எங்கள் ஸ்கூட்டரின் மேல் ஒருவர் உட்கார்ந்திருந்தார். எங்கள் வண்டி என்று தெரிந்ததும் 'சாரி' சொல்லி இறங்கினார். அப்பாவோ "பரவாயில்லை. நீங்கள் உட்கார்ந்திருங்கள். நாங்கள் இப்போது கடைகளைச் சுற்றிப் பார்க்கப் போகிறோம்" என்று சைட் பாக்ஸைத் திறந்தார். அந்த ஆள், அப்பா வண்டியிலிருந்து உணவோ, தண்ணீர் பாட்டிலோ எடுப்பார் என்று நினைத்தார் போலிருக்கிறது. வண்டியிலிருந்து செருப்புகளை எடுத்ததும் அவருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அப்பாவிடம் "நீங்கள் வண்டி வாங்கி எத்தனை வருடமாகிறது?" என்றார். "3 வருடம்" என்றார் அப்பா. "அடடா! நானும் 25 வருஷமா வண்டி ஓட்டறேன். ஊர் சுத்திப் பார்க்கப் போற இடத்தில் எல்லாம் செருப்பு டோக்கனுக்குச் செலவு செய்தேனே! எனக்கு இந்த ஐடியா வரலையே" என்று ஆதங்கப்பட்டார். சுற்றி உள்ளவர்கள் சிரித்து விட்டனர்.

**- டி. துர்கா, எட்டாம் வகுப்பு, கே.வி.ஐ.என்.எஸ். ராஜாளி, அரக்கோணம்**

## பகுத்துண்டு...

திருநெல்வேலி மாவட்டம் ரெட்டியார்பட்டி அரசு மாணவர் விடுதியில் தங்கிப் படித்த அந்த நாட்களை என்னால் மறக்கவே முடியாது. விடுமுறை நாட்களெல்லாம் ஒரே ஜாலிதான். பாட்டுப் போட்டி, நடனப் போட்டி, வீரபாண்டியக் கட்டபொம்மன் வசனம் என்று ஒரே அமர்க்களம்தான்.

சில நாட்கள் ஊருக்கு அருகே உள்ள மலைக்குச் சென்று விடுவோம். மலைச் சரிவில் இலந்தைச் செடிகள் ஏராளம். சீஸனில் இலந்தைப் பழங்களைப் பறித்து இரண்டு பைகளையும் நிரப்பி விடுவோம்.

விடுதியில் அநேக மாணவர்களின் பெட்டியில் ஓர் அமுல் டப்பா கட்டாயம் இருக்கும். அதில் அதிரசம், சீடை, முறுக்கு, பனை வெல்லம் சேர்த்த பச்சரிசி மாவு போன்ற தின்பண்டங்கள் இருக்கும். இதை நாங்கள் 'ஸ்டாக்' என்போம்.



ஒவ்வொரு வேளையும் உணவு பறிமாறியவுடன், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல், நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை' என்ற திருக்குறளைச் சொல்லிவிட்டுத் தான் சாப்பிடுவோம்.

**- ஞா. மாடசாமி, சென்னை**

## அச்சு வெல்லம்

மளிகைப் பொருட்கள் வாங்கச்

சென்றிருந்தேன். கடைக்காரரோ ஹிந்திக்காரர். சாமான்களை 'பேக்' செய்து கொண்டிருக்கும்போது, மற்றொருவர் கடைக்கு வந்து, ''வெல்லம் ஒரு கிலோ குடுங்க'' என்று கேட்டார். கடைக்காரரும் 'சரி' என்பதற்காக ''அச்சா!'' என்று ஹிந்தியில் கூறினார். ஆனால் வாங்க வந்தவரோ, அச்சு வெல்லமா என்பதைத் தான் கேட்கிறார் என்று நினைத்து, ''அச்சு வெல்லம் இல்லைங்க. மண்டை வெல்லம்'' என்று கூற, கடையிலிருந்த அனைவரும் சிரித்து விட்டோம்!

-வினோத், சங்கரன் கோவில்



## டாக்கா - டேக்கா

உலகக் கோப்பை தொடர் முடிந்த கையோடு இந்திய கிரிக்கெட் அணியில் சச்சின், ஸ்ரீநாத் உள்ளிட்ட முக்கிய வீரர்கள் 'டாக்கா' கிரிக்கெட் போட்டிக்குச் செல்லாமல் ஓய்வு எடுத்தனர். இந்தச் செய்தியை என் அப்பா சொல்லிக் கொண்டு இருந்தார். அப்போது என் தங்கை சுகன்யா ''அப்பா, நம்ம பிளேயர்ஸ் எல்லாம் 'டாக்கா' கிரிக்கெட்டுக்கு 'டேக்கா' கொடுத்துட்டாங்கன்னு சொல்லுங்க'' என்றாள். தங்கையின் எதுகை-மோனையைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தோம்.



- மு. மோசஸ் பிரவின் ஞானகுமார்,
எட்டாம் வகுப்பு, சுவார்ட்ஸ் மெட்ரிக் பள்ளி, இராமநாதபுரம்

## கை நீட்டாதே!

ஒரு முறை வெளியூர் செல்வதற்காகப் பேருந்தில் பயணித்துக் கொண்டிருந்தோம். நிறுத்தமொன்றில் பேருந்து நின்றதும், எங்களுக்குப் பக்கத்து ஸீட்டில் இருந்தவர் வெளியே வெள்ளரிப் பிஞ்சு விற்பவரிடம் விலை விசாரித்தார். அப்போது பக்கத்திலிருந்த சிறுவன் அவரையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தான். விலை விசாரித்த அவர் காசைக் கொடுத்து ஜன்னலுக்கு வெளியே வெள்ளரிப் பிஞ்சை வாங்க, கையை நீட்டினார். அவரைத் தடுத்த அச்சிறுவன் ''வெளியே கையை நீட்டாதிங்கப்பா. இங்க பாருங்க என்ன எழுதியிருக்கு'' என்று கையை நீட்டினான். அவன் காட்டிய இடத்தில் 'பேருந்தில் கரம், சிரம், புறம் நீட்டாதீர்' என்று எழுதியிருந்தது. அவன் கன்னங்களைத் தட்டிய அவர் ''பஸ் ஓடும்போதுதான் நீட்டக் கூடாது. நிற்கும்போது நீட்டலாம்'' என்று சொல்லிச் சிரித்தார்.



- க. தனலட்சுமி, மயிலாடுதுறை

## தேனே...

தேர்வுக்கு முதல் நாள் தமிழ்ப் பாட வேளையில், ஆசிரியர் அனைவரையும் தமிழ்ப் பாடம் படிக்கும்படி சொல்லியதால், படித்துக் கொண்டிருந்தோம். ஒரு மாணவன் மட்டும் தமிழ்ப் பாடத்தைப் படிக்காமல் ஆங்கிலம் படித்துக் கொண்டிருந்தான். அதைக் கண்ட ஆசிரியர், ''தமிழைப் படிக்காமல் ஆங்கிலம் படிக்கிறியே'' என்றதற்கு அவன் ''தமிழ்தானே, படித்து விடலாம்'' என்றான். உடனே தமிழாசிரியர் ''தமிழ் தானே என்று நினைக்காதே. 'தமிழ் தேனே' என்று படி'' என்று சொன்னதும் மாணவர்கள் அதனைக் கைதட்டி ரசித்தனர்.

- ஆதித்தனார்,
மகாராஜநகர்



# சொல்லுங்கள் விடை என்ன?

I 1. உயிர் இன்றி ஊரெல்லாம் திரியும்; உருவம் இன்றி ஓடித் திரியும்; கைகள் இன்றி தொட்டு விளையாடும்; கால்கள் இன்றிக் கண்ட இடமெல்லாம் வரும் - அது என்ன?

2. கூர்முட்கள் இரண்டிருக்கும்; கருவேலும் அல்ல! கூசாமல் மணி அடிக்கும்; கோயிலும் அல்ல! சுவரிலே இருப்பான்; பல்லியும் அல்ல! - அது என்ன?

3. எண்ணெயில் கோலம் போட்டு எடுத்த ஒரு பின்னல் தட்டு - அது என்ன?

4. பேர் பெற்றது காலாலே; பொதி சுமப்பது உடலாலே - யார் அவன்?

5. இரண்டு கொம்புகள் உண்டு, மாடல்ல; வேகமாக ஓடுவேன்; மானல்ல— நான் யார்?

- பா. கவிதா, கலவை.

II 1. உணவு சமைப்பாள். ஆனால் அம்மா இல்லை. உயிர் இருக்கும். ஆனால் வெட்டினால் ரத்தமில்லை - அவள் யார்?

2. காற்றில் கலந்திருப்பாள். கண்களுக்குத் தெரியாதவள். மூச்சில் கலந்து விட்டால் நம் மூச்சையே நிறுத்தி விடுவாள் - அவள் யார்?

3. நாளுக்கு மூன்று முறை வருவாள். குழந்தையில் அடிக்கடி, முதியோர் ஆனால் வருவதைக் குறைப்பாள் - அவள் யார்?

4. கதை சொல்லுவாள். கவிதையும் சொல்லுவாள். சௌந்தரமாய் சொல்லத் தெரியாத சுந்தரவள்ளி - அவள் யார்?

- மு. சுகன்யா, ஆறாம் வகுப்பு,
சுவார்ட்ஸ் மெட்ரிக் பள்ளி,
இராமநாதபுரம்

III 1) மணியடித்தால் மலைப்பாம்பு நகரும் - அது என்ன?

2) மனிதன் போடாத பந்தலில் மலர்ந்து கிடக்குது பூ - அது என்ன?

3) ஊரெல்லாம் வம்பளப்பான். ஓர் அறையில் அடங்கிடுவான் - அவன் யார்?

4) கண்ணால் பார்க்கலாம்; கையால் பிடிக்க முடியாது - அது என்ன?

- நா. முருகன், சென்னை.

IV 1. நெருப்பிலே சுட்ட மனிதன். நெடுங்காலம் வாழ்வான் - அவன் யார்?

2. வீட்டில் இருக்கிற அண்டாவுக்குத் தாம்பாளம் இல்லை - அது என்ன?

3. யானை விரும்பும்; சேனை விரும்பும்; அடித்தால் வலிக்கும், கடித்தால் இனிக்கும் - அது என்ன?

4. ஒரு நெல் குத்தி வீடெல்லாம் உமியாச்சு - அது என்ன?

5. வெயிலில் மலரும்; காற்றில் உலரும் - அது என்ன?

6. வெள்ளைக் குதிரையும் கறுப்புக் குதிரையும் மாறி மாறி ஓடும். யாராலும் அவற்றைத் தடுக்க முடியாது - அவை என்ன?

- தி.சே. அறிவழகன்,
திருப்புலிவனம்.

விடைகள்:

I. 1. காற்று 2. சுவர்க்கடிகாரம், 3. முறுக்கு 4. நாற்காலி, 5. சைக்கிள்
II. 1. தாவரம், 2. நோய்க் கிருமி, 3. பசி, 4. வானொலி
III. 1. ரயில், 2. நட்சத்திரம், 3. நாக்கு, 4. நிழல்.
IV. 1. செங்கல், 2. கிணறு, 3. கரும்பு, 4. விளக்கு, 5. வியர்வை, 6. பகலும் இரவும்



## முக்கிய கோவில்கள்

1. திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில்.
2. சங்கரன் கோவில் கோமதி அம்மன் கோவில்.
3. தென்காசி காசி விசுவநாதர் கோவில்.
4. கிருஷ்ணாபுரம் ஆஞ்சநேயர் கோவில்.
5. வாசுதேவ நல்லூர் மாரியம்மன் கோவில்.
6. புளியரை தெட்சணா மூர்த்தி கோவில்.
7. சிவகிரி பாலசுப்பிரமணியர் கோவில்
8. கரிவலம் வந்த நல்லூர் பால்வண்ண நாதர் கோவில்
9. தேவிப்பட்டணம் காளியம்மன் கோவில்.
10. குற்றாலம் குற்றாலநாதர் சுவாமி கோவில்

— மு. தனரத்தினம்,
இரண்டாம் வகுப்பு,
விவேகா மெட்ரிக் பள்ளி,
சிவகிரி,
திருநெல்வேலி.

## புத்திசாலி கண்ணன்!

ஊருக்கு ஒதுக்குப் புறத்தில் இருந்தது அந்தப் பழங்கால ஜமீன் மாளிகை. அதில் சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்த கண்ணன் தன் வயது முதிர்ந்த தாத்தா, பாட்டியுடன் வசித்து வந்தான். கண்ணன் ஆறாம் வகுப்பு படித்து வந்தான். ஒரு நாள் கண்ணன் உறங்கிக் கொண்டிருந்தான். அப்போது ஏதோ சத்தம் கேட்க, கண் விழித்துப் பார்த்தான். இருட்டில் ஓர் உருவம் பீரோவைத் திறந்து நகைகளையும், பணத்தையும் மூட்டையாகக் கட்டிக் கொண்டு இருந்தது.

தாத்தாவும் பாட்டியும் நன்கு தூங்கிக் கொண்டிருந்தனர். கண்ணனின் மனமும் மூளையும் ஒருங்கே வேலை செய்தது.

திருடனுக்குத் தெரியாமல் மெதுவாக எழுந்து வீட்டுக் கிணற்றடிக்குச் சென்றான். கிணற்றுக்கு அருகில் அமர்ந்து அழ ஆரம்பித்தான். அப்போது திருட்டு மூட்டையுடன் திருடன் அங்கு வந்தான்.

அழுகின்ற கண்ணனைப் பார்த்த திருடன், "தம்பி, நீ யார்? ஏன் இங்கு உட்கார்ந்து அழுகிறாய்?" என்றான்.

கண்ணன், திருடனிடம் "ஐயா, நான் ஒரு ஏழை. வீட்டிலிருந்து ஒரு வெள்ளிக் குடத்தைத் திருடினேன். தாகம் எடுத்ததால் இந்தக் கயிற்றில் குடத்தைக் கட்டி

## முதல்

திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோவில் அருகேயுள்ள 'நெல்கட்டான் செவல்' என்னும் கிராமத்தில் 1715ல் பிறந்த சிற்றரசர் தான் பூலித்தேவர். இவர் 1726ல் (11 வயதிலேயே) மன்னராக முடிசூட்டப்பட்டார்.

அக்காலத்தில் தமிழகத்தின் தென் பகுதியில் ஆட்சி செய்யும் அரசர்கள் அனைவரும் ஆற்காடு நவாப் முகமது அலிக்குக் கப்பம் கட்ட வேண்டும் என்று சட்டம் இயற்றினார். ஆனால் 1741 வரை யாரும் கப்பம் கட்டவில்லை.

இதனால் கோபமடைந்த ஆற்காடு நவாப், கப்பம் வசூலிக்கும் உரிமையைக் 'கிழக்கிந்திய கம்பெனி' என்ற பெயரில் வணிகம் செய்து கொண்டிருந்த ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார். இதனைப் பூலித்தேவர்

தண்ணீர் இழுத்தேன். கயிறு அறுந்து குடம் கிணற்றுக்குள் விழுந்து விட்டது. எனக்கு நீச்சல் தெரியாது. விலையுயர்ந்த வெள்ளிக் குடம்'' என்று கூறி அழுகையைத் தொடர்ந்தான். திருடனுக்கு அந்த வெள்ளிக் குடத்தையும் எடுக்க ஆசை ஏற்பட்டது.



அவன் உடனே, ''தம்பி அழாதே! நீ இந்த மூட்டையைப் பார்த்துக் கொள். கயிற்றின் வழியாகக் கிணற்றில் இறங்கி உன் வெள்ளிக் குடத்தை எடுத்துத் தருகிறேன்'' என்றான்.

கண்ணனும், ''மிக்க நன்றி! நான் உங்கள் மூட்டையைப் பார்த்துக் கொள்கிறேன்!'' என்றான்.

வெள்ளிக் குடமும் நமக்குத் தான் என்று எண்ணிக் கொண்டே கிணற்றில் இறங்கினான் திருடன்.

இதுதான் சமயம் என்று கண்ணன் மூட்டையைத் தூக்கிக் கொண்டு போய் தன் வீட்டுக்குள் வைத்தான். வேகமாகத் தெருவுக்குள் ஓடி, ஆட்களையும் அழைத்து வந்தான். அனைவரும் கம்பு, கத்தியுடன் கிணற்றைச் சுற்றி நிற்க, கிணற்றில் மூழ்கித் தேடிய திருடன் அவ்வளவுதான்! ஊரார் அனைவரும் அவனைப் பிடித்து அடித்து காவலர்களிடம் ஒப்படைத்தனர். கண்ணனின் சமயோசித புத்தியை ஊராரும் தாத்தா, பாட்டியும் பாராட்டினர்.

— எஸ். பிரேமா, ஐந்தாம் வகுப்பு,
சேனைத்தலைவர் உயர்நிலைப் பள்ளி,
விக்கிரமசிங்கபுரம்

# முழக்கமிட்ட ராஜா!

எதிர்த்தார். ஆங்கிலேயருக்கு எதிரான முதல் முழக்கம் இதுவே.

ஆங்கிலேயருக்கும் பூலித்தேவருக்குமிடையே போர் மூண்டது. இதில் ஆங்கிலேயர்கள் படுதோல்வியடைந்தனர்.

இதனால் பூலித்தேவரை நேரடியாகத் தாக்க முடியாமல் சூழ்ச்சி செய்தனர். மன்னிப்பு கேட்பது போல நடித்து, அவர்கள் புதிதாகக் கட்டிய ஆயுதத் தொழிற்சாலையைப் பார்வையிட அழைத்தனர். சூழ்ச்சியறியாத பூலித்தேவர் அங்கு சென்ற போது அவரை இரும்புக் கூண்டில் அடைத்தனர்.

பின்னர் கடைசி ஆசையாகத் தன் இஷ்ட தெய்வமான ஆவுடை நாச்சியாரை வணங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டதால், சங்கரன் கோவிலில் உள்ள அருள்மிகு சங்கர நயினார் திருக்கோவிலுக்கு அழைத்து வரப்பட்டார். அங்கு அவர் வணங்கிய படியேதான் உயிரைத் துறந்தார்.

எனவே, இவரை, 'முதல் முழக்கமிட்ட நெல்கட்டும் செவல் மகாராஜா பூலித்தேவர்' என்று அடைமொழியிட்டு இக்கோவிலில் இவரது திருவுருவப்படம் வைக்கப்பட்டுள்ளது.

— எம். வினோத், சங்கரன்கோவில், நெல்லை மாவட்டம்.



## திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சில விநோதமான ஊர்ப் பெயர்கள்:

தலையால் நடந்தான் குளம்
பேய்க் குளம்
காடு வெட்டி
குத்தப் பஞ்சான்
இடிந்த கரை
குருவிக் குளம்
ஓடை மறிச்சான்
காவல் கிணறு
கழுகு மலை
சேந்த மரம்.

— ஆ. மாரியப்பன்,
ஒன்பதாம் வகுப்பு,
இ.சி.இ.அரசு ஆண்கள் மேல்
நிலைப் பள்ளி, தென்காசி,
திருநெல்வேலி மாவட்டம்.

## மூன்று எழுத்து முத்துகள்



பிறவி என்ற மூன்று எழுத்தில் பிறந்து
மழலை என்ற மூன்று எழுத்தில் தவழ்ந்து
அன்பு என்ற மூன்று எழுத்தில் வளர்ந்து
கல்வி என்ற மூன்று எழுத்தைக் கற்று
வெற்றி என்ற மூன்று எழுத்தைப் பெற்று
கடமை என்ற மூன்று எழுத்தைக் கடந்து
முதுமை என்ற மூன்று எழுத்தை அடைந்து
மறைவு என்ற மூன்று எழுத்தில் முடிந்தது.

— எம். ரமா ப்ரியா,
சேனைத் தலைவர் உயர்நிலைப்
பள்ளி, விக்கிரமசிங்கபுரம்.

## பெயர்க் காரணம்!



திருநெல்வேலி - திரு + நெல் + வேலி. திரு - கடவுள். நெல் - தானியம், வேலி - பாதுகாப்பு.

ஒரு காலத்தில் நெல்லையப்பர் குடி கொண்டிருக்கும் நெல்லை மாநகரில் ஒரு குடியானவன் வாழ்ந்து வந்தான். அவன் நெல்லை வேக வைத்து நெற்களத்தில் காய வைத்திருந்தான். மேகமோ, மழைக்குரிய அறிகுறியோ தென்படவில்லை. நெல் காய்ந்து கொண்டிருந்தது. திடீரென எதிர்பாராது மேகம் கறுத்தது. மழையும் பொழிந்தது. கன மழையாக இருந்ததால் குடியானவனால் தன் நெல்லை அள்ளிப் பாதுகாக்க முடியவில்லை. உடனே இறைவனிடம் முறையிட்டான். இறைவன் அவனுடைய வேண்டுதலைக் கேட்டார். என்ன அதிசயம்! நெல்லை மாநகர் முழுவதும் வெள்ளம் கரை புரண்டு ஓடியது. ஆனால் குடியானவனின் நெல் காய்ந்து கொண்டிருக்கும் நெற்களத்தில் மட்டும் மழை பெய்யவில்லை. இறைவன் அதற்கு வேலியாக இருந்து காவல் புரிந்ததால் அப்பகுதிக்குத் திருநெல்வேலி என்று பெயர் ஏற்பட்டது.

— த. அருண் கார்த்திக்,
ஏழாம் வகுப்பு,
பாரதி வித்யா பவன் பள்ளி, திண்டல்,
ஈரோடு - 9

## வீரத்தின் விளை நிலம் நெல்லைச் சீமை



வெள்ளையர்களின் ஆதிக்கத்தை எதிர்த்து வீர முரசு கொட்டிய வேங்கைகள் உலவிய மண் நெல்லைச் சீமை.

முன்பிருந்த திருநெல்வேலி மாவட்டத்தில் ஒட்டப்பிடாரத்தில் பிறந்து இந்த நாட்டு விடுதலைக்கு உழைத்திட்ட வ.உ.சிதம்பரம் பிறந்த மண் இந்த நெல்லைச் சீமை.

பாட்டாலேயே ஆங்கிலேயரைப் பதறடித்த பாட்டுக்கொரு புலவன் பாரதி. இதே நெல்லையிலுள்ள எட்டயபுரத்திலே தான் எழுஞாயிறாய் உதயமானான்.

ஆஷ் துரையை மணியாச்சி ரெயில் நிலையத்திலே சுட்டுக் கொன்ற வீரவேள் வாஞ்சிநாதன் பிறந்ததும் இதே நெல்லையிலுள்ள செங்கோட்டையில்தான்.

நாட்டு விடுதலைக்காக ஆங்கிலேயரை எதிர்த்துப் போர் முழக்கமிட்ட பூலித்தேவன் பிறந்தது இதே நெல்லையிலுள்ள நெல் கட்டும் செவல் என்ற ஊரில் தான்.

ஆங்கிலேயர் மேல் பாய்ந்த கட்டபொம்மன் பிறந்ததும் இதே நெல்லையில் உள்ள பாஞ்சாலங்குறிச்சியில்தான்.

இப்படி வீரத்தின் விளைநிலம் எங்கள் நெல்லை பூமி என்று சொல்வதிலே எங்களுக்குப் பெருமை.

**— மு. ராம்கணேஷ், நெல்லை மாவட்டம்.**

---



## குவாக்...குவாக்...

நான் கிராமத்துப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது ஒரு முறை மாவட்டக் கல்வி அதிகாரி வருகை தந்திருந்தார். ஒவ்வொரு வகுப்பாக அவர் பார்த்துக் கொண்டு வந்தார். எங்கள் வகுப்பில் ஆங்கிலப் பாடவேளை நடந்து கொண்டிருந்தது. அதிகாரி ஒரு மாணவனை எழுப்பி, "வாத்துக்கு இங்கிலீஷ்ல என்ன பேரு?" என்று கேட்டார். அம்மாணவன் விழித்தான். உடனே ஆசிரியர் சமயோசிதமாக "ஏண்டா, எது கேட்டாலும், 'டக், டக்'னு சொல்வே. அது மாதிரி இப்பவும் 'டக்'னு சொல்ல வேண்டியதுதானே?" என்று கூறினார். மூன்று முறை 'டக்' என்ற வார்த்தையைக் கேட்டதும் 'Duck' என அவன் கூற உடனே அதிகாரி பாராட்டி விட்டுச் சென்றார்.

**— பெனிஷா,**
**ஐந்தாம் வகுப்பு,**
**டேனியல் தாமஸ் மெட்ரிக் பள்ளி,**
**திசையன் விளை.**

### வீரபாண்டிய கட்டபொம்மன்

திருநெல்வேலி என்றாலே, வரலாற்றில் நினைவுக்கு வருபவர் 'கட்டபொம்மு'தான். இவர்தான் சுதந்திரப் போராட்டத்தில் தமிழகத்தின் முதல் வீரர். இவர் 96 பாளையங்கள் எனப்படுகிற பகுதியை ஆண்டவர்.

- வெ. இராதா கிருஷ்ணன்,
தஞ்சாவூர்.

# விடுகதை

1) சுற்றிக் கொண்டே இருப்பான், சொன்ன பேச்சைக் கேட்பான் — அவன் யார்?

2) போவான் வருவான்; சொன்ன பேச்சைக் கேட்பான் — அவன் யார்?

3) தலைக்கு மேலே மலரும் பூ, வெயில், மழையைக் காக்கும் பூ, வட்டமான பூ, வாடாத பூ — அது என்ன?

4) சித்திரப் பின்னல் கோட்டைக் குள்ளே போக வழி உண்டு, திரும்ப வழியில்லை — அது என்ன?

5) நாடெல்லாம் சுற்றி வரும் நாட்டுக்குள்ளே வராது — அது என்ன?

6) வட்ட வட்டத் தட்டிலே வேலைப்பாடு நிறைஞ்சிருக்கு — அது என்ன?

**— கி. பிரம்மா சக்தி, வள்ளியூர், திருநெல்வேலி மாவட்டம்**

விடை: 1) மின் விசிறி 2) கதவு 3) குடை 4) எலிப்பொறி 5) கப்பல் 6) நாணயம்

## உங்களுக்குத் தெரியுமா?

தமிழக முதலமைச்சர்களில் கடித இலக்கியத்துக்கு முன்னோடியாய்த் திகழ்ந்த சிறப்புக்குரியவர் — அறிஞர் அண்ணா

தமிழில் முதல் நாவல் — பிரதாப முதலியார் சரித்திரம்

உவமைக் கவிஞர் — சுரதா

இரவீந்தரநாத் தாகூர் நோபல் பரிசு பெற்ற படைப்பு — கீதாஞ்சலி

தேசிய திரைப்பட விழாவின் சின்னம் — தாமரை

தமிழ் இலக்கியத்தின் 'வால்ர்ஸ்காட்' என்று அழைக்கப்படுபவர் — கல்கி

பழந்தமிழ் இசை மரபினைக் கூறும் கல்வெட்டு உள்ள இடம் — குடுமியான்மலை.

**— சொ. அருணாச்சலம், ஒன்பதாம் வகுப்பு, சேனைத் தலைவர் உயர்நிலைப் பள்ளி, விக்கிரமசிங்கபுரம்.**

திருநெல்வேலியில் பார்க்க வேண்டிய இடங்களில் மிகவும் முக்கியமானது முண்டந்துறை சராணாலயம். இந்தச் சரணாலயம் புலிகளுக்குப் பெயர் பெற்றது. அது தவிர சிங்க வால் குரங்குகளும் இங்கு ஏராளம் உண்டு.

அட்டையில்: **வைஷ்ணவி, விஜய்**
வண்ணப்படம்: **ஸ்ரீஹரி**

## கடல் குதிரை

கடல் குதிரை என்பது ஒரு வகை மீன். இதன் உடல் அமைப்பைக் கொண்டே இதைக் கடல் குதிரை என்கிறோம்.



இம்மீனின் தலை குதிரைத் தலையைப் போன்று சிறியதாய் அமைந்துள்ளது. இதன் உடற்பாகம் சங்கிலித் தொடர் போலவும் முள் போன்று கூர்மையாகவும் அமைந்துள்ளது. வால் பகுதி பாம்பின் வால்பகுதியைப் போல் இருக்கும். ஒண்ணரை முதல் இரண்டு அங்குலம் வரை நீளமுள்ளது.

இதன் வாய்ப்பகுதி 'பைப்' போன்று சிறிது நீண்டு இருக்கும். இதன் மூலமாக உணவை உறிஞ்சி உட்கொள்ளும். மற்ற மீன்கள் இடும் முட்டை, கடலில் வாழும் மிகச் சிறிய உயிரினங்கள் போன்றவையே கடல் குதிரைகளின் உணவு. இறந்து போன எப்பொருளையும் இவை உண்பதில்லை.

**— சி. சிவராம் சங்கர், ஏழாம் வகுப்பு, சத்திரம் பாரதி மேல்நிலைப் பள்ளி, கடையம், திருநெல்வேலி மாவட்டம்.**

வாத்தியார்: அக்பர் வாழ்ந்த காலம் எது?

மாணவன்: தெரியலை சார்.

வாத்தியார்: புத்தகத்தைப் பார்த்து சொல்லுடா.

மாணவன்: அக்பர் 1542 - 1605

வாத்தியார் : இதை முதலிலேயே சொல்லுவதற்கென்ன?

மாணவன்: அது அக்பரோட போன் நம்பர்னு நெனைச்சேன் சார்!

— ரெ. பிரின்ஸ்,
எட்டாம் வகுப்பு,
டேனியல் தாமஸ் மெட்ரிக் பள்ளி,
திசையன்விளை



"கிளாசுக்கு வர்ற நேரமாடா, இது?

"சார், சாலை விதிதான் காரணம்."

"எப்படிடா?"

"ஸ்கூலுக்கு வர்றப்ப, ரோட்ல 'பள்ளி இருக்கிறது, மெதுவாகச் செல்லவும்'னு போர்டைப் பார்த்தேன். அதான் லேட்டு!"

— பிரேமா லெட்சுமி,
ஒன்பதாம் வகுப்பு,
சேனைத் தலைவர் உயர்நிலைப் பள்ளி,
விக்கிரமசிங்கபுரம்.



## வாய் விட்டுச் சிரியுங்கள்!



"டாக்டரைப் பார்த்தியா? என்ன சொன்னார்?"

"ஒண்ணும் சொல்லலை."

"ஏன்? ஒண்ணும் சொல்லலை?"

"நீங்க பார்த்துட்டு மட்டும் தானே வரச் சொன்னீங்க?"

— அ. மரிய குரோபி,
ஒன்பதாம் வகுப்பு,
சேனைத் தலைவர் உயர்நிலைப் பள்ளி,
விக்கிரமசிங்கபுரம்.

"அந்த பேட்ஸ் மேன் ஏன் கிரீஸ் லைனைவிட்டு வெளியே வரமாட்டேங்கிறார்?"

"அவர் ரொம்ப மரியாதை தெரிஞ்சவராம். பெரியவங்க கிழிச்ச கோட்டைத் தாண்டவே மாட்டாராம்!"

— ஜெ. உதயா, ஒன்பதாம் வகுப்பு ,
சேனைத் தலைவர் உயர்நிலைப் பள்ளி,
விக்கிரமசிங்கபுரம்.







# மே... மே...

ஆடு பார்க்காதவர்களே இருக்க முடியாது! வீட்டில் வளர்க்கக் கூடிய பிராணிகளில் இது மிகவும் முக்கியமானது. ஆடு வளர்ப்பு சிறந்த தொழிலாகக் கருதப் படுகிறது. உலகெங்கும் ஆடுகள் காணப் படுகின்றன.

பாலூட்டி விலங்குகளில் கொம்பும் இரட்டைக் குளம்பும் உடைய அசை போடும் வகையைச் சேர்ந்தது ஆடு. இதன் கொம்பு உள்ளே இருக்கும் எலும்பை உறை போல் மூடிக் கொண்டிருக்கும்.

சமமான தட்ப வெப்ப நாடுகளில் மிகுந்த ஈரமில்லாத இடங்களில் நன்றாகச் செழித்து வளரக் கூடியவை ஆடுகள். எனினும் இவை கரடு முரடான மலைப்பாங்கான இடங்களில் இயற்கையாக வாழ்பவை. காட்டாடுகள் உயரமான மலைப்பகுதிகளில் வாழ்கின்றன.

**எஸ். சுஜாதா**

ஆடுகளில் செம்மறியாடு, வெள்ளாடு என இரண்டு வகைகள் உள்ளன. இரண்டு வகைகளிலும் காட்டாடுகள் உண்டு.

வெள்ளாட்டுக்கும், செம்மறியாட்டுக்கும் நிறைய வித்தியாசங்கள் உண்டு. வெள்ளாட்டை விட செம்மறியாடு பருத்திருக்கும்; குள்ளமாகவும் இருக்கும். கொம்பு தலையின் இரு பக்கத்திற்கும் நீட்டிக் கொண்டு, சுருண்டு, முறுக்கிக் கொண்டிருக்கும். கொம்புகளில் வரிகள் காணப்படும்.

வெள்ளாட்டின் கொம்பு தலை உச்சியிலிருந்து மேல் நோக்கியெழுந்து







பின்னால் வளைந்திருக்கும். அதில் வரிகள் பெரும்பாலும் தோன்றுவதில்லை. வால் மிகச் சிறியதாகவும் மேல் நோக்கி நிமிர்ந்தும் நிற்கும். வெள்ளாட்டின் தாடையில் தாடியிருக்கும். தாடியில்லாத வெள்ளாடுகளும் உண்டு. வெள்ளாட்டுக் கடாவுக்கு ஒருவிதமான மொச்சை நாற்றம் இருக்கும். இந்த நாற்றம் வெள்ளாடு இனம் பெருகும் காலத்தில் அதிகமாக அடிக்கும். வெள்ளாடு மிகவும் திறமையாகவும், விரைவாகவும் செங்குத்தான பாறைகளில் ஏறக் கூடியது.



தொடர்ந்து செல்லும். மிகவும் பயந்த சுபாவம் உடையவை; அதே சமயம் சண்டை என்று வந்து விட்டால் பெரிய கடா எருதையும் எதிர்த்து சண்டையிடும். குட்டிகளைப் பெண் ஆடுகள் கவனிக்கும்.

வெள்ளாடு ஏழைகளின் பசு என்று அழைக்கப்படுகிறது. கடுமையான வாழ்க்கையையும் தாங்கக் கூடியது. தழையோ, புல்லோ எது கிடைத்தாலும் உண்டு வாழும். வெள்ளாட்டில் கறுப்பு, பழுப்பு, வெள்ளை எனப் பல நிறங்கள் உள்ளன. கறுப்பு ஆடுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவற்றில் ஆண் வெள்ளாடுக்குக் கடா, தகர், மோத்தை என்று பல பெயர்கள் உண்டு. பெண் ஆடு ஐந்து மாதத்தில் குட்டியை ஈனும். சாதாரணமாக இரண்டு குட்டிகள் பிறக்கும். குட்டி பிறக்கும்போதே உடலில் முடியிருக்கும். பிறந்த மூன்று, நான்கு மணி நேரத்தில் ஓடித் துள்ளிக் குதிக்கும். 6 மாதம் வரை தாய்ப்பால் குடிக்கும். 10 முதல் 14 ஆண்டுகள் வரை உயிர் வாழும். வெள்ளாட்டுப் பால் வெள்ளையாகவும், இனிப்பாகவும் இருக்கும். கொழுப்புச் சத்தும், புரோட்டீன் சத்தும் இதில் அதிகமிருக்கும்.

காட்டாடுகள் வருடை அல்லது வரை ஆடு என்று அழைக்கப்படுகின்றன. நீலகிரி, ஆனை மலை, மேற்குத் தொடர்ச்சி மலைகளின் உயர்ந்த இடங்களிலும் இமய மலையிலும் காட்டாடுகள் வாழ்கின்றன.

செம்மறியாட்டின் வால் சற்று நீண்டு கீழ் நோக்கித் தொங்கும். இவற்றிற்குத் தாடி கிடையாது; மொச்சை நாற்றமும் கிடையாது. செம்மறி ஆடு பெரும்பாலும் புல் மேயும். வெள்ளாடு பெரும்பாலும் தழை மேயும்.

ஆண், பெண் செம்மறியாடுகளுக்குக் கொம்புண்டு. பெண்ணின் கொம்பு அளவில் சிறியதாக இருக்கும். சில வகைகளுக்குக் கொம்பே இருக்காது.



செம்மறியாட்டில் மட்டும் 200 வகைகள் உள்ளன. இவற்றில் 36 வகைகள் பெரும்பான்மையாக வளர்க்கப்படுகின்றன. கம்பளி, மென்மயிர்த்தோல், இறைச்சி, பால் இவற்றின் தன்மையைக் கொண்டு அவற்றை 6 பிரிவுகளாகக் கருதுகின்றனர்.

புற்களின் மேல் இருக்கும் பனியுடன் சாப்பிடுவதால் இவற்றால் சில வார காலம் கூட தண்ணீர் குடிக்காமல் இருக்க முடியும். இவை மந்தை, மந்தையாக வாழக் கூடியவை. தலைமை ஆடு முதிய கடாவாக இருக்கும். அது போகும் வழியைப் பின்பற்றி மற்ற ஆடுகள்

தி. ஜானகி



# உள்ளங்கையைக் காட்டு!

ரதத்தின் அருகில் சென்று கொண்டிருந்த மகாதேவர், குரல் கேட்டுத் திரும்பினார். எதிரே பதினெட்டு வயது மதிக்கத்தக்க இளைஞன். அவன் கையில் தங்கக் கொலுசு... அந்திப் பொழுதிலும் பளபளத்துக் கொண்டிருந்தது.

"இ...து...இது... உனக்கு எப்படி கிடைத்தது?"– வியப்போடு வினவினார்.

"ஐயா! நேற்று மாலை கோவிலுக்குத் தாங்கள் ஒரு சிறுமியுடன் வந்திருந்தீர்கள். கோவில் வாசலில் இது கிடந்தது. நீங்கள் ரதத்தில் ஏறும்போதுதான் கவனித்தேன். அந்தச் சிறுமியின் ஒரு காலில்தான் கொலுசு இருக்கிறது என்று. நான் அருகில் வருவதற்குள் ரதம் வேகமாகச் சென்று விட்டது. வாயிற் காவலன் தங்களைப் பார்க்க அனுமதிக்கவில்லை. அதனால் தான் இன்று தங்களிடம் இதைக் கொடுக்கிறேன்" என்று பணிவோடு நீட்டினான்.

"என் பேத்தியோட கொலுசு, காணாமல் போனது எங்கே கிடைக்கப் போகிறது என்று நினைத்தேன். நீ கண்டுபிடித்துக் கொடுத்ததற்கு மிக்க நன்றி" என்று கூறியவாறு கொலுசை வாங்கிக் கொண்டார். பிறகு அவனைப் பார்த்து, "உன் பெயர் என்ன? நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"என் பெயர் வல்லபன். வேலை தேடிக் கொண்டிருக்கிறேன். வருகிறேன் ஐயா" என்று வணங்கிவிட்டுக் கிளம்பினான்.

அருகில் நின்றபடி எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த வல்லபனின் நண்பன் தங்கப்பன் அவனைப் பார்த்து, "வல்லபா! உனக்குக் கொலுசு கிடைத்த விவரத்தை நீ என்னிடம் சொல்லவே இல்லையே?" என்றான்.

"மற்றவர்கள் பொருளென்றால் உனக்கு இனிப்பு சாப்பிடுவது மாதிரி.



உன்னிடம் சொல்லியிருந்தால் என்னை அடித்து உதைத்தே பிடுங்கிக் கொண்டு போயிருப்பாய்" என்றான்.

"ஐயோ... எனக்கு வேண்டாம் நீ கண்டெடுத்த நகை. அதை விற்று உன் தங்கச்சியின் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்யலாம் இல்லையா?"

"போடா... மற்றவர்கள் சொத்தை எடுத்துக் கொள்ளணும்னு மனதாலே நினைச்சாக் கூட பாவம். இனி என்னிடம் இப்படி எல்லாம் பேசாதே" என்றான் சற்றே கோபத்தோடு.

நடைபெற்ற உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த மகாதேவருக்கு வல்லபனின் மீது இருந்த நல்ல அபிப்பிராயம் இன்னும் அதிகரித்தது. எனவே ரதம் ஓட்டும் சாரதியிடம் மறுநாள் காலை வல்லபனைத் தன் மாளிகைக்கு வரும்படி சொல்லி அனுப்பினார்.

"ஐயா! என்னை வரச் சொன்னீர்களாமே?"

பணிவுடன் கேட்ட வல்லபனை நிமிர்ந்து பார்த்தார் மகாதேவர்.

"வா வல்லபா! பணியிலிருந்து ஓய்வு பெற்று நம் நாட்டின் தலைநகரிலிருந்து இந்த மாளிகைக்கு வந்து ஆறு மாதம் ஆகிறது. எனக்கு மன்னரைத் தெரியும். அவரிடம் நான் தரும் ஓலையைக் கொடுக்க வேண்டும். அதற்குத்தான் உன்னை வரச் சொன்னேன்."

"சரி ஐயா!"

"ஆனால் ஒரு நிபந்தனை. நான் கொடுக்கும் ஓலையை அப்படியே மன்னரிடம் சமர்ப்பிக்க வேண்டும். அதைப் பிரித்து படித்துப் பார்க்கக் கூடாது."

"சரி ஐயா!"

"ஓலையைப் பெற்றுக் கொண்ட மன்னர் உனக்கு ஏதாவது கொடுத்தால் சந்தோஷமாகப் பெற்றுக் கொள்."

"அப்படியே செய்கிறேன்."

மகாதேவர் வல்லபனுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, ஓலையைக்

கொடுத்தனுப்பினார்.

"மிகாதேவர் மாளிகையிலிருந்து நீ வெளியே வருவதைப் பார்த்தேன். அவர் உன்னிடம் என்ன சொன்னார்?" ஆவலுடன் கேட்டான் தங்கப்பன்.

வல்லபனும் நடந்ததைக் கூறினான். தங்கப் பனுக்குப் பெயர்தான் தங்கப்பனே தவிர எதிர் மாறான குணம் கொண்டவன்.

'ஓலையைப் படித்த மன்னர் ஏதாவது கொடுக்கப் போகிறார் என்றால், அதைத் தான் வாங்கிக் கொள்ள வேண்டும். அதற்கு முன் ஓலையில் எழுதியிருப்பதைப் படித்துப் பார்த்திட வேண்டும்.' மனதில் எழுந்த ஆசையை அவ னால் அடக்க முடியவில்லை. அவன் மூளை மின்னல் வேகத்தில் வேலை செய்தது.

"வல்லபா! உன்னைப் பார்த்து நான் திருந்தி விட்டேன். நீ சொன்ன மாதிரி மற்றவர்கள் பொருளுக்கு ஆசைப்படாமல் உழைத்து சாப்பிட ஆசைப்படறேன். என்னோட அப்பாவுக்குத் தெரிஞ்சவர் ஒருத்தர் தலை நகரத்திலே இருந் தார். அவரைப் பார்த்தா வேலை கிடைக்குமாம். தலை நகருக்கு நாம இரண்டு பேருமே போன தில்லை. எனவே நாம் சேர்ந்து போவோம். தலைநகர் வந்ததும் நீ உன் வேலையைக் கவனி. நான் என் வேலையைப் பார்க்கிறேன்."

வல்லபனுக்கு நம்பிக்கை உண்டாகும்படி பேசினான் தங்கப்பன். அவனும் சம்மதித்தான்.

"தங்கப்பா! நாம் ஊரை விட்டுக் கிளம்பி மூன்று நாட்கள் ஆயிற்று. இன்னும் பத்து நாழிகை நேரம் நடந்தால் தலைநகரை அடைந்து விடலாமாம். அதனால் இந்த ராத்திரியை இங்கே கழித்துவிட்டு, கருக்கலிலே கிளம்பி பயணத்தைத் தொடரலாம்" என்று வல்லபன் கூறவே தங்கப்பனும் மகிழ்ச்சியோடு சம்மதம் தெரிவித்தான். இந்த மாதிரியான சந்தர்ப்பத்திற்குத்தானே அவன் காத்துக் கொண்டிருந்தான்.

இரவு உணவிற்குப் பிறகு சத்திரத்தின் திண்ணையில் இருவரும் படுத்துக் கொண் டனர்.

சிறிது நேரத்தில் அனைவரும் கண்ண யர்ந்து விட்டனர், மெதுவாக எழுந்து அமர்ந் தான் தங்கப்பன். வல்லபன் நன்றாகத் தூங்கு வது தெரிந்தது. தான் தயாராகக் கொண்டு வந்திருந்த மயக்கம் தரும் மூலிகை வேரை அவன் மூக்கிற்கு நேராகக் காட்டினான். சில நொடிகளில் வல்லபனின் தலை மயங்கிச் சாய்ந்தது. அவன் பத்திர மாகத் தன் தலைமாட்டில் வைத் திருந்த பையை எடுத்தான் தங்கப் பன்.

மஞ்சள் துணியில் சுற்றி வைக் கப்பட்டிருந்த ஓலையைக் கண்டு பிடித்து எடுத்தான். பூனை போல நழுவி சத்திரத்தின் உள்ளே ஏற்றி வைக்கப்பட்டிருந்த மாக்கல் அகல் விளக்கின் ஒளியில் ஓலையைப்



படித்தான்.

'மாண்புமிகு மன்னா! கஜானாவில் காலியாக இருக்கும் காவலாளி வேலையை இந்த ஓலையைக் கொண்டு வருபவனுக்கு அளிக்கும்படி பணிவுடன் வேண்டுகிறேன்' – மகாதேவர்.

ஓலையை நான்கைந்து முறை படித்தான். ஓலையைப் பத்திரப் படுத்திக் கொண்டான். ஒன்றும் தெரியாதவன்போல வல்லபனின் அருகில் வந்து படுத்துக் கொண்டான்.

சொன்னபடி விடியற்காலை எழுந்து வல்லபனும், தங்கப்பனும் தலை நகரை அடைந்தனர்.

"வல்லபா! நான் எங்கப்பாவுக்குத் தெரிந்தவர் வீட்டுக்குப் போகிறேன். நீ மன்னரைப் பார்த்து விட்டுத்தானே போகப்போகிறாய்?"

தங்கப்பன் கேட்டதற்கு 'ஆமாம்' என்னும் பொருள்பட தலையை அசைத்தான் வல்லபன்.

'இன்றே அரசரிடம் ஓலையைக் கொடுத்தால் ஒரு வேளை வல்லபன் வந்து உண்மையைச் சொன்னாலும் சொல்லலாம். எனவே நாளைக்கு மன்னரிடம் ஓலையைக் கொடுக்கலாம்' என்று மனதிற்குள் தீர்மானித்தபடி அவ்விடத்தை விட்டு அகன்றான் தங்கப்பன்.

அரண்மனை வாயிலை அடைந்தான் வல்லபன். தயாராக ஓலையை வைத்துக் கொள்ளலாம் என்று பையில் கைவிட்டவனுக்கு ஏமாற்றம்.

'வழியில் எங்கேயாவது தவறி விழுந்து விட்டதோ' என்று எண்ணியவனாய் ஓலையை வந்த வழியிலேயே தேடிக் கொண்டே மீண்டும் சத்திரத்திற்கே வந்தான். அங்கும் தேடினான்.

"தம்பி! என்ன தேடறே? ராத்திரி உன்னோட வந்தானே, அவன் நீ தூங்கும் போது உன் கிட்டே இருந்த துணிப் பையிலேயிருந்து ஓலையை எடுத்து உள்ளே விளக்கு வெளிச்சத்திலே படிச்சான். அவனோட நடவடிக்கையை நான் கவனித்தது அவனுக்குத் தெரியாது" என்று சத்திரத்து சமையல்காரர் சொன்னதும் அதிர்ந்து விட்டான் வல்லபன். வெகு நேரம் யோசித்தான். தங்கப்பன் ஏமாற்றுக்காரன் என்று தெரிந்தும் அவன் வார்த்தையை நம்பி தன்னோடு வரச் சொன்னது தவறு என்று வருந்தினான். தலைநகரில் தங்கப்பனை எங்கே தேடுவது? மறுநாள் காலை அரசரிடம் சென்று நடந்ததைக் கூறிவிட்டு ஊர் திரும்பி விட வேண்டும் என்று முடிவெடுத்தவனாய் சத்திரத்திலேயே தங்கிவிட்டான்.

மறுநாள்– அரசவையில் நுழைந்த வல்லபன் அங்கு நின்று கொண்டிருந்த தங்கப்பனைப் பார்த்ததும் திடுக்கிட்டான்.

ஓலையைக் காணாது வல்லபன் நேற்றே கிளம்பி ஊரை நெருங்கிக் கொண்டிருப்பான் என்று எண்ணியபடி மகிழ்ச்சியோடு மன்னரிடம் ஓலையைக் கொடுத்த தங்கப்பனுக்கு நண்பனைப் பார்த்ததும் அதிர்ச்சி.

மன்னரை வணங்கிய வல்லபன் நடந்த எல்லாவற்றையும் கூறினான். "தங்கப்பா! நீ என்ன சொல்கிறாய்?" மன்னர் வினவினார்.

"அரசே! மகாதேவர் ஐயா என்னிடம் தான் இந்த ஓலையைக் கொடுத்து தங்களிடம் கொடுக்கச் சொன்னார்" என்றான் பணிவுடன்.

மன்னர் குழம்பினார். மகாதேவர் யாரிடம் ஓலையைக் கொடுத்தார் என்று.

"தங்கப்பா! ஓலையை நீ படித்தாயா?" – உண்மையை அறிய வினவினார்.

"இல்லை அரசே!"

---

● *நமது கண்ணால் 17,000 வண்ணங்களைக் கண்டறிய முடியும்.*

● *முகத்தில் 14 எலும்புகள் உள்ளன.*

*- கி. ஜனனி*



● காம்பஸைக் கண்டுபிடித்தவர் எல்மர் ஏ. ஸ்பெர்ரி

"அவர் வேறு ஏதாவது உன்னிடம் சொன்னாரா?"

" இல்லை மன்னரே!"

வல்லபனை நோக்கி, "மகாதேவர் உன்னிடம் என்ன செய்தி சொன்னார்?" என வினவினார்.

"அரசே! தங்களை நலம் விசாரித்ததாகத் தெரிவிக்கச் சொன்னார். தங்கள் குதிரை பழையபடி ஆரோக்கிய நிலைக்குத் திரும்பிவிட்டதா என்றும் கேட்டு வரச் சொன்னார்."

"ஆம் அரசே! மகாதேவர் ஐயா என்னிடம் சொன்ன இந்தத் தகவலை நான் சொல்ல மறந்து விட்டேன்'' என்று அவசரமாகக் கூறினான் தங்கப்பன்.

"அப்படியா தங்கப்பா! இன்னும் என்ன சொன்னார் என்பதைச் சற்று யோசித்துச் சொல்."

சிறிது நேரம் யோசிப்பதுபோல பாவனை செய்துவிட்டு, "அரசே! வேறு ஒன்றும் அவர் கூறவில்லை" என்றான்.

"வல்லபா! உன் பதில்?"

''மன்னரே! தங்களிடம் ஓலையைக் கொடுத்து நீங்கள் படித்து முடித்தவுடன் என் இரண்டு கைகளையும் நீட்டி, இரண்டு உள்ளங்கைகளையும் தங்களிடம் காண்பிக்கச் சொன்னார்."

"அப்படியா! இதோ... ஓலையைப் படிக்கிறேன்''–

படித்த ஓலையை மீண்டும் படிப்பதுபோல பாவனை செய்தார்.

"மாண்புமிகு மன்னா! இந்த ஓலையைக் கொண்டு வருபவனுக்கு 100 கசையடி கொடுங்கள் என்று மகாதேவர் எழுதியிருந்தார். யார் அங்கே! நூறு கசையடி கொடுப்பதற்கு ஆளை வரச் சொல்" மன்னர் கட்டளையிட்டார். திடுக்கிட்டான் தங்கப்பன். "பொய்! ஓலையிலே அந்த மாதிரி எழுதவில்லையே. ஓலையைக் கொண்டு வருபவனுக்குக் கருவூலத்திலே காவலாளி வேலையைத் தரச் சொல்லித்தான் எழுதியிருக்கிறார்" என்று பயத்தில் தன்னையும் மறந்து கூறிவிட்டான்.

மன்னர் புன்முறுவல் பூத்தார்.

"தங்கப்பா! ஓலையையே படிக்காத உனக்கு ஓலையில் எழுதப்பட்டிருந்த செய்தி எவ்வாறு தெரியும்? மகாதேவர் பல வருடங்களாகக் கருவூலத்தில் அதிகாரியாகப் பணியாற்றி, தற்சமயம் ஓய்வு பெற்று தன் சொந்த ஊருக்குச் சென்று விட்டார். எனக்கும் அவருக்கும் இடையே உள்ள ரகசிய அடையாளம் தான் உள்ளங்கையைக் காட்டு என்பது. அதாவது, யார் என் முன்னால் உள்ளங்கையை விரித்துக் காட்டுகிறார்களோ அந்த ஆளின் கரங்கள் கறை படாத கரங்கள். அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் என்று அர்த்தம். புரிந்ததா? உன் வாயிலிருந்தே உண்மையை வரவழைப்பதற்காக இவ்வாறு நடந்து கொண்டேன். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள். நேர்மையையும் உண்மையையும் அதிக நாட்கள் திரை போட்டு மறைக்க முடியாது'' மன்னர் கூறி முடித்தார்.

தீங்கு செய்த தங்கப்பனுக்குத் தண்டனை கிடைத்தது. வல்லபனின் நேர்மையான பணிபிற்குப் பரிசாகக் கருவூலக் காவலர் பதவி கிடைத்தது.



* *கத்தோலிக்க கிறிஸ்துவர்களின் ஜெப மாலையில் 60 மணிகள் இருக்கின்றன.*

* *சிங்கப்பூரில் அரசால் அங்கீகரிக்கப்பட்ட நான்கு மொழிகளில் ஒன்று தமிழ் மொழி.*

*– கோட்டை செல்வம்*

---

● *மின் விசிறியைக் கண்டு பிடித்தவர் வீலர்.*

# நிலாவுக்குச் சென்று, திரும்புங்கள்!

கண்களுக்குக் குளிர்ச்சியான நிலாவை யாருக்குத்தான் பிடிக்காது! பூமியிலிருந்து கிளம்பி நிலாவை அடைந்து, மீண்டும் பூமிக்கே திரும்புங்கள், பார்க்கலாம்!

- நிலாவுக்கு மனிதர்கள் செல்வது பற்றி முதலில் சிந்தித்தவர்கள் ரஷ்யர்கள்.
- அமெரிக்கர்கள்தான் நிலவில் முதலில் காலடி பதித்தனர். இந்தப் பெருமைக்கு உரியவர் நீல் ஆம்ஸ்ட்ராங்.
- 1969 ஆம் ஆண்டு ஜூலை 20ந் தேதி நிலவில் மனிதர்கள் இறங்கினர். ஆம்ஸ்ட்ராங்குடன் ஆல்டரின் மற்றும் காலின்ஸ் ஆகியோரும் சென்றிருந்தனர்.



• ஹோ சி மின்



• எடிஸன்

# உங்கள் ஓட்டு

## தலைகீழ்

ஒருமுறை ராஜாஜி தன் சிப்பந்தியிடம் ஓர் அஞ்சல் உறையைக் கொடுத்து அதில் தபால் தலையை ஒட்டிக் கொண்டு வருமாறு கூறினார்.

ஆனால் அந்தச் சிப்பந்தியோ அவசரத்தில் தபால் தலையைத் தலைகீழாக ஒட்டிக் கொண்டு வந்து ராஜாஜியிடம் கொடுத்தார்.

இதைக் கண்ட ராஜாஜி, "என்னப்பா... நாங்கள் அனைவரும் பிரிட்டிஷ் சக்கரவர்த்தியைக் கவிழ்க்கப் படாத பாடு படுகிறோம். ஆனால் நீ அந்தக் காரியத்தை ஒரே நிமிஷத்தில் செய்து விட்டாயே!" என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

## ஓட்டு

இங்கிலாந்தின் முன்னாள் பிரதமர் பெஞ்சமின் டிஸ்ரேலி தேர்தலில் போட்டியிட்டபோது ஒருமுறை மிடில்செக்ஸ் என்ற தொகுதிக்குச் சென்றிருந்தார். அங்கு நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிவிட்டு அங்கிருந்தோரிடம் தனக்கு வாக்களிக்குமாறு கேட்டுக் கொண்டார். அப்போது கூட்டத்தின் நடுவில் இருந்த ஒருவன் எழுந்து, "என் ஓட்டு சைத்தானுக்குத்தான்" என்று கிண்டலாகச் சொன்னான்.

உடனே டிஸ்ரேலி, "அப்படியா! சரி. உங்களது நண்பர் சைத்தான் இந்தத் தேர்தலில் நிற்கவில்லை என்றால் தங்கள் ஓட்டினை எனக்குப் போடுவீர்களா?" என்று கேட்டார். கிண்டல் செய்தவன் முகத்தில் அசடு வழிந்தது.

— ஆர். பிரசன்னா,
கரூர்

## அடித்தாயா?

புகழ்பெற்ற ஆங்கில அறிஞரான ஹேவ்லக் எல்லிஸ் சிறு வயதில் தோளில் காயத்துடன் பள்ளியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார். அவருடைய தாய் துடிதுடித்து "யார் உன்னை இப்படி அடித்துக் காயப்படுத்தியது?" என்று கேட்டாள். "என் வகுப்புத் தோழன்" என்றார் எல்லிஸ்.

"நீயும் திருப்பி அடித்தாயா, என்ன?" என்றார் அவருடைய தாய். "இல்லை அம்மா, அப்படி செய்தால் நானுமல்லவா அவனைப் போல் கெட்டவனாகி விடுவேன்" என்றார் எல்லிஸ்.

— நெ. இராமன்,
சென்னை

## பலன்?

ரப்பர் மரத்தைத் தவிர புதிய மரஞ் செடிகள் எவற்றிலாவது இயற்கையான ரப்பர் கிடைக்குமா என்று ஐம்பதாயிரம் தாவர வகைகளை எடிஸன் சோதித்துப் பார்த்துவிட்டார்.

எதுவும் பயன்படவில்லை.

"நம்முடைய ஐம்பதாயிரம் சோதனைகளுக்கும் ஒரு பலனும் இல்லாமல் போய் விட்டதே!" என்று கூறி வருத்தப்பட்டார் அருகிலிருந்த நண்பர்.

எடிஸன் அமைதியாகச் சொன்னார் : "ஏன் பலன் இல்லை? இந்த ஐம்பதாயிரம் மரம், செடிகளும் ரப்பர் செய்யப் பயன்படாது என்பதைத் தெரிந்து கொண்டோமா இல்லையா?"

— என். ஜரினா பானு, திருபட்டினம்

## தண்டனை!

சிறிய வயதில் நரேந்திரன் கொஞ்சம் குறும்புக்காரப் பிள்ளை தான். ஆனால் தன்னுடைய குறும்புத்தனத்தால் பிறர் திட்டு வாங்கக் கூடாது என்று நினைக்கும் நல்ல பிள்ளை.

ஒரு நாள் பள்ளியில் ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் நரேந்திரன் ஒரு குறும்புத்தனம் செய்ய, மாணவர்கள் சிரித்து விட்டனர். ஆசிரியருக்கு வந்ததே கோபம். உடனே தான் நடத்திக் கொண்டிருந்த பாடத்தில் இருந்து ஒரு கேள்வியைக் கேட்டார்.

அனைவரும் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தார்கள். ஆனால் நரேந்திரன் மட்டும் சரியான பதில் கூறினான். "பாடத்தைக் கவனிக்காமல் அரட்டையா அடிக்கிறீர்கள்? பெஞ்சு மேல ஏறி நில்லுங்கடா!" என்றார் ஆசிரியர்.

முதலில் நரேந்திரன் தான் ஏறி நின்றான். "நீ ஏன் நிற்கிறாய்? உன்னை நான் சொல்லவில்லையே?" என்றார் ஆசிரியர். உடனே நரேந்திரன், "இல்லை ஐயா! என் குறும்புத்தனத்தால் தான் அவர்கள் சிரித்தார்கள். அதனால் தப்பு என்னுடையது தான்!" என்று உண்மையைக் கூறினான். அவனது முதுகில் தட்டிக் கொடுத்தார் ஆசிரியர். அந்த நரேந்திரன் தான் சுவாமி விவேகானந்தர்.

— எம். வினோத், சங்கரன்கோவில்

# யாருக்கு?


• ராஜாஜி

## தேசப்பிதா

கப்பல்கள் வரிசையாக நின்ற சைகோன் துறைமுகத்திற்குள் ஓர் இளைஞன் நுழைந்தான். தனக்குக் கப்பலில் ஒரு வேலை கொடுக்கும்படி கேட்டான். எலும்பும் தோலுமாய் இருந்த அவனுடைய உருவத்தைப் பார்த்த மாலுமி, "உனக்குக் கப்பலில் வேலையா?" என்று கலகலவெனச் சிரித்தார்.

சற்று யோசித்து "எந்த வேலையும் செய்வாயா?" என்றார், "எந்த வேலையும் பழகினால் செய்ய முடியும்" என்றான் அந்த இளைஞன். அந்தப் பதிலில் ஓர் உறுதி தொனித்தது. அவனுக்குச் சமையல் வேலை கொடுக்கப்பட்டது. தூங்குவதற்கான நேரம் கிடைத்தாலும் தூங்காமல் புத்தகங்களைப் படிப்பான்.

பிறகு தன்னுடைய அயராத உழைப்பால் வியட்நாம் நாட்டின் தலைவர் ஆனான் அந்த இளைஞன். அவர்தான் டாக்டர் ஹோ சி மின். இன்றும் அவர் வியட்நாமின் தேசப்பிதா என்று மக்களால் அழைக்கப்படுகிறார்.

— அ. கமர்தாஜ், மரிமானிகுப்பம், வேலூர்


• விவேகானந்தர்

# விஞ்ஞானி கடத்தல்!

கதை, படம் : முத்து

2

ஐயோ! மாமா, ரொம்ப பயமாயிருக்கு?

ஒண்ணும் பயமில்லை. பத்திரமாக இறங்கிடலாம்.

விமானம் தரை இறங்கியது.

அப்பாடா! யாருக்கும் காயம் ஏதும் இல்லையே!

இல்லை மாமா.

இனி எப்படி போறது?

தாத்தா வீடு ஒரு மைல் தூரத்தில்தான் இருக்கும். வாங்க, நடக்கலாம்!

மூவரும் நடந்தனர். அப்போது மேலே ஒரு ஹெலிகாப்டர் பறந்தது.

தாகம் ரொம்ப அதிகமாக இருக்கு...


ரகு, தண்ணீரைக் காலி பண்ணிடாதே! வீடு வர்ற வரைக்கும் வேணும்.
சரி, சரி. கோவிச்சுக்காதே ஜானு.


மாமா, உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? தாத்தா ஏதோ ஒரு புதிய விஷயத்தைக் கண்டுபிடித்திருக்கிறாராம்.
அப்படியா!


அது ரொம்ப முக்கியமான கண்டுபிடிப்பு! அதனாலதான் தாத்தா ரொம்ப நாளா வீட்டுப் பக்கமே வரலை...


மாமா... கொஞ்சம் நில்லுங்கள்.
ஐயோ, என்ன பண்றது?


ஜானு கத்தியை எடுத்து வீசினாள்.


இந்த வகை சிலந்தி கடித்தால் உடனே மரணம்தான்.
நல்லவேளை மாமா தப்பினார்!
தேங்ஸ் ஜானு, உயிரைக் காப்பாற்றி விட்டாய்.


இது பொல்லாத சிலந்தி. நானும் இதைப் பற்றி படித்திருக்கேன்.




அங்கே விஞ்ஞானியின் உதவியாளர் ஜோ கட்டிப் போடப்பட்டுக் கிடந்தார்.















எனக்குப் பயமாக இருக்கு!
அவர் அறையைச் சோதனையிடலாம். ஏதாவது தடயம் கிடைக்கும்.


சோதனைக் கூடம் உடைக்கப் பட்டிருந்தது.


உருப்படியா ஒண்ணும் கிடைக்கலை.
என்ன பண்றது?


நாம் உடனே கடத்தல்காரர்களைத் தேடிக் கிளம்பணும்.
ம்... எப்படி போறது?


சார் பயன்படுத்திய ஜீப் இருக்கு. அது உங்களுக்கு உதவும்.
பழைய ஜீப்பா? சரி.


... ஆனால் எந்தப் பக்கம் போறதுன்னு தெரியலையே!
(தொடரும்)

டாக்டர் கு. கணேசன்



# வெயிலை எப்படி சமாளிப்பது?

● ஆர். அமுதவள்ளி, காரைக்குடி

*? வயிற்றுப்போக்கு உள்ள குழந்தைக்கு என்ன உணவு கொடுக்கலாம், டாக்டர்?*

! வழக்கமாக, வயிற்றுப்போக்கின் போது குழந்தைக்கு நீரிழப்பு ஏற்படும். அதை ஈடு செய்ய உப்பும் சர்க்கரையும் கலந்த கரைசலைக் குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். இந்தக் கரைசலை வீட்டிலேயே தயாரிக்கலாம். கொதிக்க வைத்து, ஆற வைத்த ஒரு லிட்டர் தண்ணீரில் 20 கிராம் சர்க்கரையையும், 5 கிராம் உப்பையும் கலந்து கொண்டால் உப்புக் கரைசல் தயார். இதை அடிக்கடி கொடுக்க வேண்டும். இந்தக் கரைசலை நன்கு மூடி வைத்து, 24 மணி நேரத்திற்குள் பயன்படுத்தி விட வேண்டும். இது கடைகளிலும் கிடைக்கிறது. 5 கிராம் பொட்டலம் என்றால் 200மி.லி. தண்ணீரில் அதைக் கலந்து 4 மணி நேரத்திற்குள் பயன்படுத்தி விட வேண்டும். அரிசிக் கஞ்சி, ஆரோரூட் கஞ்சி, ஜவ்வரிசிக் கஞ்சி ஆகியவற்றையும் தரலாம். வயிற்றுப் போக்கு குறைந்து வரும் நிலையில் இட்லி, இடியாப்பம், இளநீர், மோர் சாதம், தயிர்சாதம், ஆப்பிள் பழச்சாறு, எலுமிச்சைச் சாறு போன்றவற்றைக் கொடுக்க வேண்டும்.

● தி.சே. அறிவழகன், திருப்புலிவனம்.

*? குழந்தைகளுக்கும் சர்க்கரை நோய் வருமா? அப்படி வந்தால் அவர்களுக்கு என்ன அறிகுறிகள் இருக்கும்?*

! பெற்றோருக்கோ, தாத்தா அல்லது பாட்டிக்கோ சர்க்கரை நோய் இருந்தால் அவர்களுடைய குடும்பத்தில் பிறக்கும் குழந்தைகளுக்கு இந்த நோய் வருவதற்கு அதிக வாய்ப்புள்ளது. குழந்தைப் பருவத்தில் வைரஸ் காய்ச்சல் வந்து, கணையத்தைப் பாதித்தால் சர்க்கரை நோய் வரலாம். அடிக்கடி சிறுநீர் கழித்தல், அதிக தாகம் எடுத்தல், அதிகமாகப் பசிப்பது, உடல் எடை குறைவது, சோர்வாக இருப்பது, படுக்கையில் சிறுநீர் கழிப்பது ஆகியவை சர்க்கரை நோயின் முக்கிய அறிகுறிகள்.

● வ. கலாராணி, சென்னை - 80.

*? முகப்பருவால் ஏற்படும் கரும்*

***புள்ளிகளைப் போக்க பல களிம்புகளைப் பயன்படுத்தி விட்டேன். பலனில்லை. இதற்கு வேறு ஏதேனும் சிகிச்சை உள்ளதா, டாக்டர்?***

! முகப்பருவால் ஏற்படும் கரும்புள்ளிகளைப் போக்குவதற்குச் சாதாரணக் களிம்புகள் உதவாது. சில வேதிப் பொருள்களைப் பயன்படுத்தி கரும்புள்ளிகளைப் போக்கலாம். இச்சிகிச்சைக்கு 'கெமிக்கல் பீல்' என்று பெயர். சில ஊசி மருந்துகளும் இதற்கு உள்ளன. இவை தவிர, சிறு அறுவை சிகிச்சை முறைகளும் பலன் தரும். 'டெர்மாபெரேசன்' என்று அதற்குப் பெயர். இந்தச் சிகிச்சைகளை மேற்கொள்ள அழகூட்டும் மருத்துவ நிபுணர் அல்லது தகுதி பெற்ற அழகுக்கலை நிபுணரைச் சந்திக்க வேண்டும்.

● **த. சிவகாமி, சென்னை - 14.**

***? கோடை வெயிலைச் சமாளிக்க என்ன செய்ய வேண்டும், டாக்டர்?***

! கோடை வெயிலைச் சமாளிக்க அதிகமாகத் தண்ணீர் குடியுங்கள். சாதாரணமாகத் தினமும் 2 லிட்டர் தண்ணீர் குடிப்பது வழக்கம் என்றால், கோடையில் 3 முதல் 4 லிட்டர் வரை குடிக்க வேண்டும். காபி, தேநீர் மற்றும் வாயு நிரப்பப்பட்ட செயற்கை மென் பானங்களைக் குடிப்பதைவிட இளநீர், மோர், பதநீர், பழச்சாறுகள், லஸ்ஸி ஆகிய இயற்கை பானங்கள் குடிப்பதை அதிகப்படுத்துங்கள். எலுமிச்சைச் சாற்றில் உப்பு அல்லது சர்க்கரை சேர்த்து சாப்பிடுவது நல்லது. தர்ப்பூசணி, வெள்ளரி, கொய்யா, பப்பாளி, சாத்துக்குடி ஆரஞ்சு, திராட்சை, பலாப்பழம், அன்னாசி போன்ற நீர்ச்சத்து நிறைந்த பழங்களையும் அடிக்கடி சாப்பிடுங்கள். பகல் 12 மணியிலிருந்து மாலை 4 மணி வரை வெளியில் செல்லாமல் இருப்பது நல்லது. அவசியம் செல்ல வேண்டுமென்றால், குடையோடு செல்ல வேண்டும். இயன்றவரை நிழலில் செல்வது நல்லது. குழந்தைகள், முதியவர்கள் மற்றும் உடல்நலம் குறைந்தவர்கள் வெயிலில் அலையக் கூடாது. கண்களுக்குச் சூரியக் கண்ணாடியை (Sunglass) அணிந்து கொள்ளலாம். பருத்தி ஆடைகளே கோடை காலத்திற்கு ஏற்றவை. அவற்றில்கூட இறுக்கமான ஆடைகளைத் தவிர்த்து தளர்வான ஆடைகளை அணிய வேண்டியது முக்கியம். தினமும் இரு வேளை குளித்தால் நல்லது.

## புதிர் இங்கே! விடை கீழே!

1. உடலுக்குத் தேவையான அமினோ அமிலங்கள் அனைத்தும் உள்ள காய் எது?

அ. வாழைக்காய்
ஆ. கத்தரிக்காய்
இ. அவரைக்காய்

2. டைபாய்டு காய்ச்சல் எதன் மூலம் பரவுகிறது?

அ. கொசுக்கடி
ஆ. இருமல்
இ. அசுத்தத் தண்ணீர்

3. பழங்களில் உள்ள எப்பொருள் உணவு செரிமானத்திற்கு உதவுகிறது?

அ. பெக்டின்
ஆ. அமினோ அமிலம்
இ. பீட்டா கரோட்டின்

4. கண் அசைவுகளுக்குக் காரணமான தசைகள் எத்தனை?

அ. ஆறு
ஆ. ஏழு
இ. நான்கு

5. பித்தப்பை எந்த உறுப்புக்கு மிக அருகில் உள்ளது?

அ. இரைப்பை
ஆ. கல்லீரல்
இ. கணையம்

---

விடை இங்கே!
1. ஆ 2. இ 3. அ 4. அ 5. ஆ





சார், எங்கிட்ட கொடுங்க.

கோகுலத்தை நான்தான் முதலில் படிக்கணும். எங்கிட்ட கொடுங்க.

## கோகுலத்துக்கு சந்தா செலுத்துங்கள்!

ஓவியப் போட்டி, பொது அறிவுப் போட்டி, அனுபவங்கள், துணுக்குகள், படக்கதைகள்... இன்னும் ஏராளமான அம்சங்களையும் தாங்கி வரும் கோகுலத்துக்கு சந்தா செலுத்துங்கள்! உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பரிசளியுங்கள்.

பெயர் : ..........................................................................................

முகவரி : ......................................................................................

..................................................................................................

..................................................................................................

ஆறு மாத சந்தா *(6 இதழ்கள்)* ரூபாய் *36/-* ஒரு வருட சந்தா *(12 இதழ்கள்)* ரூபாய் *72/-*. இதை டிமாண்ட் டிராப்ட் அல்லது மணியார்டராக அனுப்புங்கள். இந்தத் தொகை 'Gokulam Tamil' என்ற பெயருக்கு இருக்க வேண்டும். வெளியூர் காசோலைகள் ஏற்கப்படமாட்டா. டிமாண்ட் டிராப்ட் அல்லது மணியார்டரை அனுப்ப வேண்டிய முகவரி :

சர்க்குலேஷன் மானேஜர், கோகுலம் (தமிழ்)
47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.



அ. குமார்



# எலிஜாவின் வயலின்!

மன்னர் ஒருவருக்கு மூன்று மகள்கள் இருந்தனர். அவர்கள் மீது அளவற்ற அன்பு செலுத்தி வந்த மன்னர், ஒருமுறை அண்டை நாடுகளுடன் போரிடச் செல்ல வேண்டியதாயிற்று. போருக்குப் புறப்படுவதற்கு முன் மூன்று மகள்களையும் அழைத்த மன்னர், "இந்தப் போரில் நான் வெற்றி பெற்றுத் திரும்பினால் உங்கள் ஒவ்வொருவருக்கும் பரிசுகள் கொண்டு வந்து கொடுக்கிறேன். யார் யாருக்கு என்னென்ன பரிசு வேண்டுமோ கேளுங்கள்" என்றார். உடனே மூத்த மகள், "எனக்கு நட்சத்திர வடிவில் வைரமொன்று வேண்டும்" என்று கேட்டாள். இரண்டாவது மகளோ "முழுக்க முழுக்க தங்க இழைகளால் நெய்யப்பட்ட கவுன் ஒன்று வேண்டும்" என்று கேட்டாள். கடைசி மகளோ, "இந்தப் போரில் வெற்றி பெற்றுத் தாங்கள் பத்திரமாகத் திரும்பி வந்தால் போதும்" என்று சொன்னாள். இதைக் கேட்ட மன்னர் மிகவும் நெகிழ்ந்து போய், "உன்னுடைய நல்ல எண்ணத்திற்கு மிகவும் நன்றி. இருப்பினும் உன்னுடைய சகோதரிகளைப் போலவே நீயும் உனக்குப் பிடித்தமானதைக் கேள். நான் புறப்படுவதற்கு முன்னால் சொன்னால் போதும்" என்றார்.

அரண்மனைக்கு வெளியே உள்ள குளக்கரை கல்லின் மீது அமர்ந்து யோசித்துக் கொண்டிருந்த இளைய இளவரசியின் முன்பு தோன்றிய வயோதிக கிழவி ஒருத்தி கேட்டாள்: "குழந்தாய், என்ன ஆயிற்று? ஏன் வருத்தமுடன் இருக்கிறாய்?". "என்னுடைய தந்தையிடம் என்ன பரிசு கேட்பதென்று தெரியவில்லை" என்று விவரங்களைச் சொன்னாள் இளவரசி. "அவ்வளவுதானே, எலிஜாவின் வயலின் வேண்டுமென்று உன்னுடைய அப்பாவிடம் கேள்" என்று சொல்லி மறைந்து போனாள் கிழவி.

மீண்டும் தன்னிடம் வந்த தந்தையிடம், "எனக்காக எலிஜாவின் வயலினைக் கொண்டு வாருங்கள்" என்று சொன்னாள் இளையமகள். அரசரும் ஒப்புக்கொண்டு போருக்குப் புறப்பட்டார்.

**யூத நாடோடிக் கதை**



**போ**ரில் சென்ற இடமெல்லாம் வெற்றி வாகை சூடிய மன்னர், தன்னுடைய மகள்கள் கேட்டபடி மூத்த மகளுக்கு நட்சத்திர வடிவில் வைரமொன்றையும், இரண்டாவது மகளுக்குத் தங்க ஆடையையும் தேடிப் பிடித்து வாங்கினார். ஆனால் மூன்றாவது மகள் கேட்ட பரிசை மட்டும் வாங்க முடியவில்லை. கடைசி முயற்சியாகப் பார்த்துவிட்டுக் கிளம்பலாமென்று தீவு ஒன்றில் இறங்கிய போது வயதான மனிதனொருவன், "எலிஜாவின் வயலின் இந்த நாட்டின் மன்னரிடம்தான் இருக்கிறது. ஆனால் அவருடைய ஒரே மகள் கல்லாக மாறியிருக்கிறாள். அவளைப் பழைய நிலைக்குக் கொண்டு வருபவர்களுக்கு எந்தப் பரிசு வேண்டுமானாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறார்" என்று சொல்லி "இந்த மூன்று இழைகளும் எலிஜா வயலினை இசைக்கும் வில்லின் இழைகளாகும். அந்த இளவரசியின் முன்பு நீங்கள் செல்லும் போது இவற்றை எரித்து விடுங்கள்" என்று கூறி மூன்று இழைகளை மன்னரிடம் கொடுத்தான்.

"வயோதிகரே உங்களுடைய பெயர் என்ன?" என்று கேட்டார் மன்னர். "என்னுடைய பெயர் எலிஜா" என்று பதில் வந்தது.

**க**ல்லாக மாறியுள்ள இளவரசி வசிக்கும் அரண்மனைக்குள் சென்றார் மன்னர். அவரை வரவேற்ற அந்த நாட்டு மன்னரும் அரசியும் கல்லாக மாறியுள்ள தங்களுடைய மகள் இருக்கும் இடத்தைக் காண்பித்தனர். அவளைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்தால் கேட்ட பரிசினைக் கொடுப்பதாகவும் தவறினால் மரண தண்டனை விதிக்கப்படுமென்றும் சொல்லப்பட்டது.

இளவரசியைப் பார்த்தவுடன் மன்னருக்கு ஒரே அதிர்ச்சி. கற்சிலை போல் உருவம் மாறியிருந்தாலும் உயிருடன்தான் இருந்தாள். பேசும் சக்தியும் இருந்தது. அவள் பேசும்போது மட்டும் உயிர் இருப்பதை உணர முடியும். மற்ற நேரங்களில் கற்சிலையாகவே தோன்றுவாள். அவளைப் பார்த்து மன்னர் கேட்டார்: "என்னிடம் சொல். இந்த நிலைமை உனக்கு எப்படி ஏற்பட்டது?"

"ஒருநாள் இந்த அரண்மனைக்குள் நான் உலவிக் கொண்டிருந்தபோது இதுவரை



நான் பார்த்திராத சுரங்கப் பாதையொன்றின் வழியே இறங்கிச் சென்றேன். கடைசியாகத் தெரிந்த ஓர் அறைக்குள் சென்றபோது தங்கச் சட்டம் போட்ட அலங்கார கண்ணாடியொன்றைக் கண்டேன். அதன் எதிரே நின்று பார்த்தபோது பிரதிபலித்த என்னுடைய உருவம் திடீரென்று மறைந்து விட்டது. திகைத்துப் போன நான் சுதாரித்துக் கொள்வதற்குள் கற்சிலையாக மாறிவிட்டேன். பேசுவதற்கு மட்டும் முடியுமே தவிர மற்றபடி நான் கற்சிலை தான். யாருக்குமே என்னைப் பழைய நிலைக்கு மாற்ற வழி தெரியவில்லை. அன்றிலிருந்து என்னைப் போலவே ஓர் உருவம் இந்த அரண்மனைக்குள் உலவுவதாகவும் யாராவது அருகில் நெருங்கினால் மறைந்து விடுவதாகவும் சொல்கிறார்கள்'' என்று கற்சிலையான இளவரசி சொன்னாள்.



*மலையைக் குடைந்து ரயில் பாதை அமைத்ததில், உலகின் மிக நீளமான ரயில் குகை ஜப்பான் நாட்டிலுள்ள சீகான் குகைதான்!*
*- ஆர்.பி. ஜெயச்சந்திரன்*

இதைக் கேட்டதும் மன்னருக்கு அந்த வயோதிகன் தன்னிடம் கொடுத்த வயலின் இழைகள் நினைவுக்கு வந்தது. அந்த இழைகளை நெருப்பிலிட்டுக் கொளுத்தியபோது அந்த அறை முழுக்க வெது வெதுப்பாக மாறியது. அதே சமயம் இளவரசியின் சிலையிலும் மாறுதல் ஏற்பட்டு பழைய உருவத்திற்குத் திரும்பினாள். பழைய நிலைமைக்கு வந்த அவளைப் பார்த்து, "இப்போது நீ அந்த மந்திர சக்தியிடமிருந்து விடுதலை பெற்று விட்டாய். கண்களை இறுக மூடியபடி ஒரு கல்லினால் அந்தக் கண்ணாடியை உடைத்து விடு. இல்லையெனில் மீண்டும் பழைய படி சிலையாகி விடுவாய். உன்னுடைய இழந்த உருவத்தை மீண்டும் உன்னிடமே தக்க வைத்துக் கொள்ள வேண்டுமெனில் இதை நீ இருட்டுவதற்குள் செய்தாக வேண்டும்" என்று சொன்னார் மன்னர்.

அப்படியே செய்வதாக உறுதியளித்த இளவரசி, சூரியன் மறைவதற்குள் கண்ணாடியை உடைத்தாள். அவளுடைய தந்தை தன்னுடைய மகள் பழைய நிலைக்கு மாறியதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து, மன்னர் கேட்ட எலிஜாவின் வயலினை அன்பளிப்பாகக் கொடுத்தனுப்பினார்.

மன்னர் நாட்டிற்குத் திரும்பியவுடன் மகள்களை அழைத்துப் பரிசுப் பொருட்களை அவர்களிடம் கொடுத்தார். ஆவலுடன் வயலின் பெட்டியைத் திறந்தாள் இளவரசி. சிறிய வடிவத்தில் வயலின் ஒன்று வில்லுடன் அதற்குள் இருந்தது. வில்லை எடுத்து வயலின் இழைகள் மீது இசைக்கத் தொடங்கியபோது இனிமையான இன்னிசை தங்கு தடையின்றி தென்றலாய் தவழ்ந்து வந்தது. வாசித்து முடித்தவுடன் அவள் எதிரே அழகான வாலிபன் ஒருவன் தோன்றி, "எதற்காக என்னை இங்கு அழைத்தாய்?" என்று கேட்டான்.

அவனைக் கண்டதும் ஆச்சரியமடைந்த இளவரசி, "எப்படி இந்த அறைக்குள் உன்னால் வர முடிந்தது?" என்று கேட்டாள். தான் புகுந்து வந்த ஜன்னலைச் சுட்டிக் காட்டிய அந்த வாலிபன், தொலைவிலிருந்து வருவதாகப் பதிலளித்தான். "உன்னுடைய வயலின் இன்னிசைதான் என்னை இங்கு அழைத்து வந்தது" என்றான். இதற்கு மேல் விவரங்களைக் கேட்காமலேயே இளவரசிக்கு நடந்தவற்றை ஊகிக்க முடிந்தது. எலிஜா வயலினை வாசிக்கும் போதெல்லாம் அதன் இசை ஜன்னல் வழியே வெளியே சென்றவுடன் அந்த வாலிபன் தன் முன்னால் தோன்றுவான் என்பதை உணர்ந்து கொண்டாள். இந்த மந்திர சக்தியால் அவனை அடிக்கடி வரவழைத்து மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

நாட்கள் நகர்ந்தன. யாரோ அந்நியருடன் தன்னுடைய தங்கை அடிக்கடி பேசிக் கொண்டிருக்கிறாள் என்ற சந்தேகம் மூத்த சகோதரிக்குத் தோன்றவே இரண்டாவது சகோதரியுடன் சேர்ந்து உண்மையைக் கண்டுபிடிக்க முடிவு செய்தாள். ஒருநாள் தங்கையின் அறைக்குள் சென்றாள். சந்தேகத்திற்குரிய இடங்களையெல்லாம் கலைத்துப் பார்த்தாள். இளவரசன் வரும் ஜன்னலை உடைத்தாள். எலிஜாவின் வயலினை எடுத்து வாசிக்கத் தொடங்கினாள். ஆனால் இன்னிசைக்குப் பதிலாகக் கர்ண கடூரமாக எழுந்த ஓசை அறை முழுக்கப் பரவி உடைக்கப்பட்ட ஜன்னல் வழியாக வெளியேறியது. காற்றில் அந்த இசை ஒலி கலந்து வந்தபோது வேறு வழியின்றி இளவரசியின் அறைக்குள் அந்த வாலிபன் வர வேண்டியதாகிவிட்டது. ஜன்னல் வழியே நுழைய முற்பட்டபோது உடைபட்டிருந்த கூர்மையான கண்ணாடிச் சில்லுகள் அவனு

• நீர்மூழ்கிக் கப்பலைக் கண்டுபிடித்தவர் டேவிட் பஷ்னெல்.



டைய உடலைக் கிழித்தன. மேற்கொண்டு உள்ளே செல்ல முயற்சிக்காமல் திரும்பிச் சென்றான்.

தன்னுடைய அறைக்குத் திரும்பிய இளவரசி, ஏதோ விபரீதம் நடந்திருக்கிற தென்பதை உணர்ந்து கொண்டாள். குழப்ப மடைந்த இளவரசி எலிஜாவின் வயலினை எடுத்து இசைக்கத் தொடங்கினாள். ஆனால் இந்த முறை இளவரசன் வரவில்லை. அவன் வழக்கமாக வரும் ஜன்னல் உடைக்கப்பட்டு அதனருகே ரத்தத் துளிகள் சிந்திக் கிடப்ப தைப் பார்த்தாள். தன்னுடைய சகோதரிகள் ரகசியத்தைக் கண்டுபிடித்ததோடு அந்த இளவரசனுக்கும் தொல்லை கொடுத்திருக் கிறார்கள் என்பதை உணர்ந்து வருந்தினாள். அந்த வருத்தத்துடனே அரண்மனைக்கு வெளியே வந்து குளக்கரை அருகே இருந்த பாறை மீது அமர்ந்தாள். முன்பொருமுறை வந்த அதே கிழவி மீண்டும் அவள் எதிரே தோன்றி என்ன நடந்ததென்று கேட்டாள். இளவரசியும் நடந்த விஷயங்கள் அனைத் தையும் அவளிடம் சொன்னாள். ''நான் சொல்வதைக் கவனமாகக் கேள். உனக்கு உடல்நலமில்லை என்றும் நலமடையும் வரை யாரையும் உள்ளே விடக் கூடாது என்று சொல்லி உன்னுடைய அறையை மூடி வை. இதற்கிடையில் காயமடைந்த இளவரசனைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டியது உன்னுடைய பொறுப்பு. உன்னால்தான் அவனு டைய காயங்களைக் குணப்படுத்த முடியும். எலிஜாவின் வயலின் வில்லிலிருந்து மூன்று இழை களை எடுத்துக் கொள். இள வரசனைச் சந்திக்கும்போது அவன் எதிரே அந்த இழைகளைக் கொளுத்தி விடு'' என்று சொல்லி மறைந்தாள்.

அந்தக் கிழவி சொன்னது போலவே செய்தாள் இளவரசி. நீண்ட தேடலுக்குப் பின் இளவர சனின் அரண்மனையை அடைந் தாள். எலிஜா காயங்களுடன் உறங் கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். கையோடு கொண்டு வந்த எலிஜாவின் வயலின் இழைகளை அங்கிருந்த கணப்பு அடுப்பி லிட்டுப் பொசுக்கினாள். அவை பற்றியெரிந்த உடனே இளவர சனின் காயங்கள் மறைந்து பழைய நிலைக்கு மாறினான். இருவருக் கும் திருமணம் இனிதே நடந்தது.

## போட்டி

# 1000/- ரூபாய் பரிசு!

ஒவ்வொரு மாதமும் உங்களின் நலனுக்காகவே இந்தப் பரிசுப் போட்டி நடத்தப் படுகிறது. பரிசு வாங்கியவர்கள் தங்கள் மகிழ்ச்சியைத் தெரியப் படுத்தியிருக்கிறார்கள். இதுவரை பரிசு கிடைக்காதவர்கள் நம்பிக்கையுடன் போட்டியில் பங்கு பெறுங்கள். சரியான விடைகளைக் கண்டுபிடித்து எழுதி, பெற்றோர் கையொப்பத்துடன், முகவரி கூப்பனை ஒட்டி அனுப்ப வேண்டும். பள்ளி, வீட்டு முகவரிகளை மறக்காமல் குறிப்பிடுங்கள். மொத்தப் பரிசு ரூ.1000/-. சரியான விடை அளித்தவர்களில் 5 பேர் குலுக்கல் முறையில் பரிசுக்குரியவர்களாகத் தேர்ந்தெடுக்கப் படுவர். ஒவ்வொருவருக்கும் ரூ.200/- பரிசாக வழங்கப்படும். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது. கடைசித் தேதி **20.6.2003.**

## இந்த மாதப் போட்டி

**பொருத்துக:**

| | |
|---|---|
| 1. முதல் கவர்னர் ஜெனரல் | பைக்கால் |
| 2. கடற்பஞ்சு | அர்ஜுனன் |
| 3. மிக ஆழமான ஏரி | பால கங்காதர திலகர் |
| 4. சுபத்ரா | ஸ்மித் |
| 5. கேசரி | பிராணி |
| 6. தென் ஆப்பிரிக்க கிரிக்கெட் கேப்டன் | மௌண்ட்பேட்டன் பிரபு |

7. இரட்டைக் கிளையில் ஒற்றை ஒணான் - அது என்ன?
8. மேலே உள்ள படத்தில் இருப்பது என்ன?

**ஆசிரியர்,**
கோகுலம்,
47, N.P ஜவாஹர்லால்
நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97.



ஆர்.பொன்னம்மாள்



# அர்ச்சுனன் அடித்த அடி!

பஞ்சபாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் அவர்களைக் காண வேத வியாசர் வந்தார். அவரை வரவேற்று காய், கனி, கிழங்குகள் கொடுத்து உபசரித்தனர்.

அவர் "தரும நந்தனா! ராஜ்ஜியத்தைத் துரியோதனன் தரப் போவதில்லை. யுத்தம் தான் நடக்கும். அப்படி யுத்தம் வந்தால் வலிமையைக்காட்ட அஸ்திரபலம் வேண்டாமா? சிவபெருமானை நோக்கி தவம் செய்தால் அற்புத பாணங்களைப் பெறலாம். அதிலும் பாசுபதாஸ்திரம் பெற கடுந்தவம் செய்ய வேண்டும். அதற்குப் பொருத்தமானவன் அர்ஜுனன்தான். சிவபூஜை செய்யும்போது கடுமையான சோதனைகள் ஏற்படலாம். முதலில் இந்திர பூஜை செய்த பின் சிவ பூஜையைத் தொடங்கு" என்று கூறி மற்றவர் கண்களுக்குத் தெரியாமலிருக்க ஒரு அரிய மந்திரத்தை உபதேசித்தார்.

அர்ஜுனன் மூத்தவர்களை வணங்கி கிருஷ்ணா நதி தீரம் சென்று, இந்திர கீல பர்வதத்தில் ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்தான். இந்திர வழிபாடு நடத்தியபின், மண்ணால் சிவலிங்கம் பிடித்து அதற்கு அபிஷேகமும் அர்ச்சனையும் செய்தான். பூஜை முடிந்தபின் ஒரு காலை மடக்கி மற்றொரு காலைத் தரையில் ஊன்றி சிவபெருமானை நோக்கித் தவம் இருந்தான்.

நாளுக்கு நாள் அவன் உடம்பிலிருந்து தவ அக்னி வெளிப்பட்டு தேவலோகத்தைத் தகித்தது. இந்திரன் வயோதிகனாக உருமாறி அர்ஜுனனிடம், "வாலிப வயதில் உல்லாசமாக இருப்பதை விடுத்து ஏன் தவம் செய்கிறாய்? இந்திரனைக் குறித்து தவம் செய்தால் போக பாக்கியங்களைப் பெறலாமே" என்று கூறினான்.

அர்ஜுனன் கோபத்துடன், "ஐயா, வயதில் பெரியவராயிருந்தும் விவேகத்தோடு வார்த்தைகள் வரவில்லையே! சிவபெருமானைத் தரிசிப்பதே



என் குறிக்கோள்! என் சிந்தையைக் கலைக்க முயற்சிப்பது தலையால் முட்டி பாறையை உடைப்பதற்கு ஒப்பானது'' என்று சொல்லி விட்டு மீண்டும் தவத்தில் ஆழ்ந்தான்.

உடனே இந்திரன் வெளிப்பட்டு அர்ஜுனனை வாழ்த்தி மறைந்தான். கௌரவர்களில் மூத்தவனான துரியோதனன் தன் நண்பனான மூகாசுரனைச் சந்தித்து அர்ஜுனனின் சிவபூஜைக்குக் களங்கம் செய்யும்படி கோரினான்.

மூகாசுரன் கொடிய பன்றியின் வடிவில் காட்டிலுள்ள மரங்களை முட்டிச் சாய்த்து, மண்ணைக் கிளறி நாலாபுறமும் கால்களால் இறைத்துக் கொண்டே சிவலிங்கத்தை நெருங்கியது.

சினம் கொண்ட அர்ஜுனன் தன் காண்டீபத்தை வளைத்து அம்பு விட, அம்பு பன்றியின் மூக்கிலே பாய்ந்து பின்புறமாய் வெளி வந்தது. பக்தனைக் காப்பாற்ற வேடனாய் வந்த சிவ பெருமானும் மூகாசுரனை அழிக்க அம்பு விட்டார். அந்தப் பாணம் பன்றியின் வால் வழியே நுழைந்து, மூக்கின் வழியே வெளியே வந்தது. இச் செயல் ஒரே சமயத்தில் நடந்தது.

மூகாசுரன் பயங்கரமாக அலறியபடி



பன்றி உடலிலிருந்து வெளிப்பட்டு உயிரை விட்டான்.

சிவகணங்களில் சிலர் சிவபெருமானுக்குத் தொண்டு செய்ய வேடவடிவம் தாங்கி உடன் வந்திருந்தனர். அதில் ஒருவன் பன்றியின் உடம்பையும், பாணத்தையும் எடுக்க வந்தான்.

அர்ஜுனன் கோபத்துடன், "யார் நீ? நான் வீழ்த்திய பன்றியை நீ எப்படி எடுக்க வரலாம்? இறைச்சி வேண்டுமென்றால் என்னிடம் அனுமதி கேட்டிருக்க வேண்டும்" என்றான்.

"இதென்ன வேடிக்கை? என் தலைவர் கொன்ற பன்றியை நீ அடித்ததாகச் சொல்கிறாய்? இது வீரர்களுக்கு அழகல்ல" என்றான் சிவகணன். "நீ வீண் வம்பு செய்கிறாய்! உன் தலைவனை அழைத்து வந்து என்னோடு போரிடச் சொல். வெற்றி பெற்றவருக்கே இப்பன்றியின் உடல் சொந்தம்" என்றான் அர்ஜுனன்.

சிவகணன் அர்ஜுனன் சொன்னதை அப்படியே போய் சிவ வேடரிடம் சொல்ல, வேடுவப் பெருமான் யுத்தத்துக்கு வந்தார். முதலில் அஸ்திரயுத்தம் நடந்தது. அதன் பின் மல்யுத்தம் நடந்தது.

சிவபெருமான் களைத்திருப்பது போல் பாவனையாய் உட்கார தனது வில்லான காண்டீபத்தால் சிவன் தலையில் அடித்தான் அர்ஜுனன். அந்த அடி சகல ஜீவ ராசிகளின் தலைகளிலும் விழுந்தது. துரியோதனன் தலையிலும், பாண்டவர்கள் தலைகளிலும் விழுந்தது.

அர்ஜுனன் "இந்த வேடனை நான் அடிக்க என் தலை வலிக்கிறதே" என்று தலையைத் தடவி விட்டுக் கொண்டான். வேடன் இருந்த இடத்தில் சிவபெருமான் காட்சி அளித்து அர்ஜுனனை ஆசீர்வதித்தார்.

"அர்ஜுனா! உன் உறுதியைச் சோதிக்கவே வேடனாக வந்தேன். உன் அடி எனக்குப் பூப்போலவே இருந்தது. வருந்தாதே! உன் தவத்தைக் கண்டு மகிழ்ந்து வரம் கொடுக்கவே வந்துள்ளேன். வேண்டிய வரத்தைக் கேள்" என்றருளினார்.

அர்ச்சுனன் சிவபெருமானைப் பலவிதமாய் ஸ்தோத்தரித்து பாசுபதாஸ்திரம் வேண்ட, அவரும் பாசுபதாஸ்திரத்தோடு மேலும் சிறப்பான பல அஸ்திரங்களைக் கொடுத்து, வெற்றி கிடைக்க வாழ்த்தி மறைந்தார்.

அர்ச்சுனன் அஸ்திரங்களோடு சகோதரர்களின் இருப்பிடம் வந்து நடந்ததைக் கூற அவர்களும் மகிழ்ந்தனர்.





விழுங்கி உயிர் நீத்தார்.

ஔரங்கசீப் அசந்துவிட்டான். அதன் பின்னர் தந்தையைக் கொல்லும் முயற்சியைக் கைவிட்டு விட்டான். ஷாஜகான் அப்போது உயிர் பிழைத்தார். அதன்பின் சிறையிலேயே எட்டாண்டுக் காலம் வாழ்ந்து இயற்கையாய் மரணமடைந்தார்.

* யி-சுன் என்பவர் ஒரு சீனத் தளபதி. இவரது சடலம் 1912ஆம் ஆண்டு ஜூன் 1ஆம் தேதி பீகிங்கில் இருந்து ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. சுமார் 2300 மைல் தூரத்தைக் கடந்து 1913ஆம் ஆண்டு ஜூலை 1ஆம் தேதி சிக்கியாங்கில் அடக்கம் செய்யப்பட்டது. சரியாக ஒரு வருடம், ஒரு மாதம் நடந்த இத்தனை நீண்ட சவ ஊர்வலம் வேறு எதுவுமில்லை.

# கை போனது;

* மொகலாய மன்னன் ஷாஜகானுக்கு முக்காராம்கான் என்று ஒரு பிரதம வைத்தியர் இருந்தார். 1658ஆம் ஆண்டு ஷாஜகானைச் சிறையிலிட்டு அவர் மகன் ஔரங்கசீப் ஆட்சியைக் கைப்பற்றினான். புதிய மன்னன் ஔரங்கசீப், ஷாஜகானுக்கு மருந்து என்ற பெயரில் விஷத்தைக் கொடுத்துக் கொன்றுவிட தன் பிரதம வைத்தியரான முக்காராமுக்கு ஆணை பிறப்பித்தான்.

வைத்தியருக்கோ தர்மசங்கடம். வைத்தியர் என்ற முறையில் ஒரு நோயாளியைக் கொல்வது என்பது அதர்மம். மறுத்தாலோ அபாயம். மன்னன் தலையைச் சீவி விடுவான். என்ன செய்வது?

வைத்தியத் தொழிலின் புனிதத் தன்மையை மாசுபடுத்தாமல் முக்காராம்கான் அந்த விஷத்தைத் தானே

* 1296ஆம் ஆண்டு டில்லியை முற்றுகையிட்டான் அலாவுதீன் கில்ஜி. முற்றுகை நெடுநாள் நீடித்தது. டில்லிக் கோட்டை எளிதில் சரணடைவதாய் இல்லை. அப்போது பீரங்கிகளில் வெடிகுண்டு வைத்து தகர்ப்பது கிடையாது. மாறாக ஏவுகணைகள் மூலம் கனமான பாறை



களை கோட்டையின் மீது வீசித் தகர்ப்பார்கள். கில்ஜியிடம் அவன் கொண்டுவந்த பெரும் பாறைக் கற்கள் தீர்ந்து விட்டன. அவனுடைய தளபதிகள் முற்றுகையைக் கைவிட்டு நாடு திரும்பி விடலாம் என்று மன்னனுக்கு அறிவுரை கூறினர்.



ஆனால் அலாவுதீன் கில்ஜி அதைக் கேட்கவில்லை. வேறு என்ன செய்யலாம் என்று யோசித்துத் தன் பொக்கிஷத்தைத் திறக்கச் சொன்னான். அதிலிருந்த கனமான தங்கப் பாளங்களை எடுத்து வந்து ஏவுகணைகளில் வைத்து டில்லிக் கோட்டையின் மீது வீசித் தகர்க்குமாறு உத்தரவிட்டு விட்டான்!

ஒவ்வொரு முறையும் அவ்வாறு வீசி எறியப்பட்ட தங்கப் பாளங்களும் 100 பவுண்டு எடைக்கு மேல் இருந்தது. கோட்டை தகர்ந்தது. டில்லி அலாவுதீன் கில்ஜி வசமாகிவிட்டது. வரலாற்றில் மிக விலையுயர்ந்த கோட்டைத் தகர்ப்பு முயற்சி இதுவாகத்தான் இருக்கும்.

# பதவி வந்தது!

* கையை வெட்டி எறிந்தால் அரச பீடம் கிடைக்குமா? கிடைத்திருக்கிறது. கி.மு. 1015ஆம் ஆண்டு, அயர்லாந்தின் கடலோரப் பகுதிகளை யார் சொந்தம் கொண்டாடுவது என்பதில் ஹெர்மான் ஓ நீல் என்பவனுக்கும் இன்னொரு தளபதிக்கும் கடும் போட்டி. இறுதியில் இருவரும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். வடக்கு கடலோரப் பகுதிகளை முதலில் யார் தொடுகிறார்களோ, அவர்களுக்கே அது சொந்தமாகும் என்பது ஒப்பந்தம். இருவரும் ஒரே நாளில் கப்பல்களில் புறப்பட்டனர். தளபதி விரைவாகக் கரையை நெருங்குவதை ஓ நீல் கவனித்து விட்டான். மின்னல் வேகத்தில் ஒரு காரியம் செய்தான். வாளை உருவி, தனது வலது கரத்தை வெட்டி கரையை நோக்கி விட்டெறிந்தான். ஓ நீலின் கரம் முதலில் கரையைத் தொட்டதால் அவனே அயர்லாந்தின் முதல் அரசனானான்.

* ஹான்ஸ் விலெம் என்பவர் மிகப் பிர



பலமான ஜெர்மானியக் கவிஞர். அவருக்கு, தாம் பிறந்த கிராமத்திலுள்ள ஓர் ஓக் மரத்தின்மீது தாளாத பற்று. தமது இறப்புக்குப் பின்னாலும், அந்த மரத்தைப் பற்றி எல்லோரும் பேச வேண்டும் என எண்ணினார். அதற்காக, தன்னை அந்த மரத்திலேயே அடக்கம் செய்துவிடுமாறு மற்றவர்களிடம் வேண்டிக் கொண்டார். 1824ஆம் ஆண்டு மார்ச் 1ல் அவர் இறந்தபோது, அவரது விருப்பப்படியே மரத்தின் நடுப்பகுதில் பெரிதாகக் குடைந்து, நின்ற நிலையில் அவரை அடக்கம் செய்தார்கள். கவிஞனைச் சுமந்து கொண்டு, வரலாற்றில் ஒரு கவிதையாக இன்றும் நிற்கிறது அந்த மரம்!



* பழங்காலத்தில் பாபிலோனியாவில் ஒரு பழக்கம் இருந்தது. ஆண்டுக்கு ஒரு முறை ஏதாவது ஓர் அடிமையைப் போலி அரசனாகத் தேர்ந்தெடுப்பார்கள். அப்படி தேர்ந்தெடுக்கப் பட்டவனுக்கு அரசனுக்குரிய எல்லா ஆடை அணிகலன்களையும் அணிவிப்பார்கள். அரண்மனைக்கு முன்புறம் உள்ள திறந்த வெளியில் சிம்மாசனத்தில் அமர்த்தி எல்லோரும் ஆடிப்பாடி மகிழ்வார்கள். மந்திரிகளும், அதிகாரிகளும் போலி அரசனுக்குப் போலியான வணக்கம் செய்து கேலி செய்வர். அப்பொழுது கூட்டத்தினர் கைதட்டி ஆரவாரம் செய்வர். பின்னர், போலி மன்னனின் கண் முன்னாலேயே தூக்குமரத்தை நட்டு, மாலையில் அவனைத் தூக்கிலிட்டு விடுவர். இப்படி செய்தால் அரசனின் ஆயுள் வளரும் என்பது அவர்களின் நம்பிக்கை.

'எர்ரா இமிட்டி' என்னும் அரசன் ஆண்ட போது, தன் அரண்மனைத் தோட்டக்காரனான அடிமை 'என்லில் பாணி' என்பவனைப் போலி மன்னனாகத் தேர்ந்தெடுத்தான். அரண்மனை மைதானத்தில் அவனை அமர்த்தி ஆடிப்பாடி மகிழ்ந்து கொண்டிருந்தனர். மாலை நெருங்கிக் கொண்டிருந்த வேளை. இன்னும் சிறிது நேரத்தில் தூக்கில் தொங்க விட இருந்த நேரத்தில், அரண்மனையிலிருந்து ஒரு சேவகன் ஓடி வந்தான். 'மன்னர் இறந்து விட்டதாக' அறிவித்தான்.

அவ்வளவுதான்! சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்த போலி அரசன் அரசனாகி விட்டான். இருபது ஆண்டுகள் சிறந்த அரசன் என்று போற்றும்படி ஆட்சி செய்தான்.

* துருக்கியை ஆண்ட சுல்தான்களின் சொந்த நூலகங்களில் உள்ள புத்தகங்கள் 'கமகம'வென்று வாசனையுடன் திகழ்ந்தன. நூலகத்தில் பிரத்தியேகமாக நியமிக்கப்பட்ட வாசனைத் திரவிய நிபுணர் ஒருவர் புத்தகங்களின் தரத்தின் அடிப்படையில் வாசனைத் திரவியங்களைத் தடவி, ஒவ்வொரு புத்தகமும் ஒவ்வொரு விதமான வாசனை வீசும்படி செய்திருக்கிறார்!

- என்.ஜரினா பானு

# புதிர் பக்கம்



**I** ரகுவும், குருவும் ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பினர். ரகு குருவிடம், "எனக்கு நீ நூறு ரூபாய் கொடுத்தால் உன்னைப் போல் நான் இரு மடங்கு பணமுள்ளவனாவேன்" என்றான். உடனே குரு, "இவ்வளவுதானா, நீ எனக்குப் பத்து ரூபாய் கொடுத்தால் போதும். நான் உன்னைப் போல் ஆறு மடங்கு பணமுள்ளவனாகி விடுவேன்" என்றான். இருவரும் தனித்தனியே எவ்வளவு பணம் வைத்திருந்தனர் என்று சொல்லுங்கள் பார்க்கலாம்?

- ஆர். ராஜலட்சுமி, கரூர்.

**II** எங்கள் ஃபிளாட்டில் நாங்கள் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தோம். அப்போது ஒருவர் எங்களிடம் பெயரையும் வயதை யும் கேட்டார். நான் அவரிடம் புதிர் மூலம் பதில் சொன்னேன். நான்கு பேரின் வயதையும் கூட்டினால் 45 வரும். ராமுவின் வயதோடு இரண்டு கூட்டினாலும், சோமுவின் வயதிலிருந்து இரண்டு கழித்தாலும், பாலுவின் வயதை இரண்டால் பெருக்கினாலும், கோபுவின் வயதை இரண்டால் வகுத்தாலும் ஒரே விடைதான் வரும் என்றேன். அப்படியானால் எங்கள் வயதென்ன?

- நெ. இராமன், சென்னை .

**III** (அ) கூண்டில் ஒரு கிளி உட்கார்ந்து கொண்டிருக்கும்போது கூண்டு எடை பார்க்கப்படுகிறது. கிளி உட்காராமல் கூண்டுக்குள் பறந்து கொண்டிருக்கும்போது எடை பார்க்கப்படுகிறது. இரு எடைகளும் ஒன்றாக இருக்குமா?

(ஆ) ஒரு கண்ணாடி தம்ளரில் ஐஸ்கட்டி ஒன்று மிதந்து கொண்டிருக்கிறது. சற்று நேரத்தில் அது கரைந்து விடுகிறது. அப்போது தம்ளரின் நீர்மட்டம் குறையுமா? கூடுமா?

- என். ஜரினா பானு, திருபட்டினம்

**IV** 21 முதல் 29 வரை உள்ள எண்களைப் பயன்படுத்தி எந்தப் பக்கம் கூட்டினாலும் விடை 75 வர வேண்டும். ஆனால் ஒரே எண்ணை மீண்டும் பயன்படுத்தக் கூடாது. எப்படி?



- வே. சுபஸ்ரீ, பத்தாம் வகுப்பு, அ.மே.நி. பள்ளி, நல்லூர்.

**V** மகாதேவன் ஒரு டீ பிரியர். தினமும் 5 கப் டீ குடிப்பார். ஒவ்வொரு கப் டீ குடிக்கும்போதும் அதன் விலையில் 5ல் 1 பங்கு விலையைத் திரும்ப பெற்று மீண்டும் ஒரு கப் டீ குடிப்பார். எனில் ஐந்து நாட்களில் அவர் குடித்த 'டீ'களின் எண்ணிக்கை என்ன?

- மு. சுகன்யா, ஆறாம் வகுப்பு, சுவார்ட்ஸ் மெட்ரிக் பள்ளி, இராமநாதபுரம்.

**VI** கீழே கொடுக்கப்பட்டிருக்கும் ஆறு கேள்விகளின் பதில்கள் 'ரா' என்ற எழுத்தில் தொடங்கும். பதில்கள் 2,3,4,5, 6 மற்றும் 7 எழுத்துகளில் அமைந்திருக்கும். எங்கே விடைகளைக் காணுங்கள். பார்க்கலாம்!

1) காந்தி அடிகள் அடிக்கடி உச்சரிக்கும்

வார்த்தை என்ன?

2) பாரத ரத்னா விருது முதன்முதலில் யாருக்கு வழங்கப்பட்டது?

3) ராமாயணத்தில் 'தச முகன்' எனக் குறிப்பிடப்படுபவன் யார்?

4) இந்தியா முதன்முதலில் அணுவெடிப்புச் சோதனை நடத்திய மாநிலம் எது?

5) காலரா தடுப்பு மருந்து ____ என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது

6) சென்னை கடற்கரையில் உள்ள உழைப்பாளர் சிலையை வடிவமைத்தவர் ____

**- சிவ மணவழகி, திருச்சிற்றம்பலம்.**

**VII** அடர்த்தியான காட்டில் ஒரு பெரிய பாம்பு நான்கு முட்டைகளை ஈன்றது. பின்னர் சிறிது காலம் கழித்து முட்டை பொரிந்து பாம்புக் குட்டிகள் வெளி வந்தன. காட்டில் திடீரென தீப்பற்றிக் கொள்ளவே பாம்பு தன் குட்டிகளை அழைத்துக் கொண்டு வேறு ஓர் இடத்திற்குச் செல்லத் தயாரானது. அப்போது வழியில் ஒரு தண்டவாளத்தில் வேகமாக ரயில் வந்தது. பெரிய பாம்பு ஒரே ஜம்ப். அடுத்த பக்கத்திற்குப் போய்விட்டது. இதேபோல் ஒவ்வொரு பாம்பும் சென்றன. நான்காவது பாம்பு தாண்டும்போது ரயில் மிகவும் அருகே வந்து விட்டது. இருப்பினும் உயிர் தப்பியது. இதைக் கண்ட பெரிய பாம்பு "அப்பாடா! எப்படியோ 6 பேரும் தப்பிதோம்" என்றது. பாம்பு ஈன்றது நான்கு குட்டிகள்தானே? எப்படி ஆறு என்று சொன்னது?

**- வே. சுபஸ்ரீ, பத்தாம் வகுப்பு, அ.மே.நி.பள்ளி, நல்லூர்.**

## விடைகள்

I. ரகு 40 ரூபாய், குரு 170 ரூபாய்

II. ராமுவின் வயது - 8 8+2 =10
சோமுவின் வயது - 12 12-2 =10
பாலுவின் வயது - 5 5x2 =10
கோபுவின் வயது - 20 20/2=10
45

III (அ). ஒரே மாதிரி இருக்காது. கிளியின் எடை மட்டும் எவ்வளவோ அவ்வளவு குறைவாக இருக்கும்.
(ஆ) கூடவோ குறையவோ செய்யாது. அப்படியேதான் இருக்கும்.

IV

| | | |
|---|---|---|
| 28 | 21 | 26 |
| 23 | 25 | 27 |
| 24 | 29 | 22 |

V மொத்தம்: 31
ஐந்து நாட்களில் = 5x5 = 25
25x1/5 = 5
5x1/5 = 1
31

VI ராம்
ராஜாஜி
ராவணன்
ராஜஸ்தான்
ராபர்ட்கோச்
ராய்சவுத்திரி

VII) அது கணக்குல வீக்! ஹி...ஹி...

## குறுக்கெழுத்துப் புதிர் விடை

# அன்புள்ள ஜக்கு...

● பி. திவ்யா, திருமோகூர்

*? ஆண் குரலுக்கும், பெண் குரலுக்கும் வித்தியாசம் தெரிவது ஏன்?*

குரல் வளை தசை, குரல் நாண், நுரையீரல் ஆகியவற்றின் ஒன்றிணைந்த செயல்பாட்டால்தான் நாம் பேசுகிறோம். குரல் நாண்களை அசைக்கும்போது குரல் வளையிலுள்ள துவாரத்தின் அளவு வேறுபடுகிறது. நுரையீரலிலிருந்து காற்றை அத்துவாரத்தின் வழியாக வெளிப்படுத்தும்போது சத்தம் வருகிறது. குரல் வளையின் அளவைப் பொறுத்து அதிர்வெண் அமைகிறது. பெண்களின் குரல் நாண்கள் குட்டையாக இருப்பதால் பெண் குரலின் ஸ்தாயி உயர்ந்திருக்கும். சிறுவர், சிறுமியர் குரல் நாண்கள் சிறு வயதில் சம அளவில் குட்டையாக இருக்கும். சிறுவர் 15 வயதை அடையும் போது குரல் நாண் திடீரென்று நீண்டு வளர்ச்சியடைகிறது. அப்போது அவர்களின் குரல் ஆண் குரலை ஒத்திருக்கும். இதனால்தான் வித்தியாசம் ஏற்படுகிறது திவ்யா.



## பறவைகளுக்கு வியர்க்குமா?

● வி. ராதிகா, தேவிபட்டணம்

*? இந்த சீசனில் எங்கு பார்த்தாலும் மாம் பழங்கள். எனக்கு மாம்பழம் என்றால் உயிர். மாம்பழத்தைப் பற்றி ஏதாவது சொல்லேன் ஜக்கு!*

! மாம்பழத்தின் வரலாறு 4000 ஆண்டுகள் பழைமை வாய்ந்தது. கி.மு. 327ல் அலெக்ஸாண்டர் இந்தியாவிற்குப் படை எடுத்து வந்தபோது மாமரத்தைப் பற்றி அறிந்தார். அதன் பிறகே மாவின் மகிமை வெளிநாடுகளுக்குப் பரவியது. இருந்தாலும் கி.பி 17 ஆம் நூற்றாண்டு வரை இந்தியா மற்றும் கிழக்கு ஆசியப் பகுதிகளில் மட்டுமே மா பயிரிடப்பட்டு வந்தது. அதன் பிறகே மற்ற நாடுகளுக்குப் பரவியது. எனவே மாமரத்தின் தாயகம் இந்தியா தான். மாவில் 1000 வகைகள்



## 1000/- ரூபாய் பரிசுப் போட்டி முடிவு

ஏப்ரல் மாதம் அறிவித்த போட்டியில் நிறையப் பேர் கலந்து கொண்டு சரியான விடைகளையும் அளித்திருந்தனர். எனவே குலுக்கல் முறையில் ஐந்து பேர் பரிசுக்குரியவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

### பரிசு பெற்றவர்கள்:

1. ந. ராமராஜ், எட்டாம் வகுப்பு, சீனிவாசராவ் மேல்நிலைப் பள்ளி, திருவையாறு.
2. எல். ராஜா, நான்காம் வகுப்பு, கிங் ஆஃப் விக்டரி பள்ளி, காலவாக்கம், காஞ்சிபுரம் மாவட்டம்.
3. எஸ். விஜயகுமார், ஏழாம் வகுப்பு, ஜியான் மெட்ரிகுலேஷன் பள்ளி,சேலையூர்.
4. எஸ். இந்திரா ப்ரியதர்ஷினி, அனிதா குமரன் மெட்ரிகுலேஷன் பள்ளி, தண்டுபத்து, தூத்துக்குடி மாவட்டம்.
5. வி. மீனாட்சி, ஐந்தாம் வகுப்பு, காமராஜர் மெட்ரிகுலேஷன் பள்ளி, கோவை.

**சரியான விடை:**

1. டேராடூன் - உத்ராஞ்சல்
2. ஒப்போசம் - வட அமெரிக்கா
3. ஃபிளவர் சகோதரர்கள் - ஜிம்பாப்வே
4. காஸ்பியன் கடல் - ஏரி
5. மனித எலும்புகள் - 206
6. முதல் விண்வெளி வீரர் - ரஷ்யா
7. சிப்பி, முத்து
8. புராண கிலா

பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்.
கலந்து கொண்டவர்களுக்கு நன்றி.

உள்ளன. இந்தியாவில் உத்திரப் பிரதேசம், பீகார், ஆந்திரா, தமிழ்நாடு, மேற்கு வங்காளம், ஒரிசா ஆகிய மாநிலங்களில் மா அதிகம் விளைகிறது.

● எம். வினோத், சங்கரன்கோவில்

*? பெண் கொசுக்கள்தான் மனிதர்களைக் கடிக்கும் என்று ஒரு பத்திரிகையில் படித்தேன். ஆண் கொசுக்களின் உணவு எது? பெண் கொசுக்கள் ஏன் இரத்தத்தை உறிஞ்சுகின்றன?*

பெண் கொசுக்களுக்கு இனப் பெருக்கம் செய்வதற்குத் தேவையான சக்தி மனிதர்களின் இரத்தத்தில் கிடைக்கிறது. எனவே அவை இரத்தத்தை உறிஞ்சுகின்றன. ஆண் கொசுக்கள் தாவரங்களின் இலைகளை அரித்து, சாற்றைக் குடிக்கின்றன. பூந்தேனையும் சாப்பிடுகின்றன.

● எம். அபிராமி, திருப்பத்தூர்

*? பறவைகளுக்கும் நம்மைப் போல் வியர்க்குமா?*

பறவைகள் வெப்ப ரத்தப் பிராணிகள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். உடல் வெப்ப நிலையைச் சீராக வைத்துக் கொள்ளும் உயிரி என்பது இதன் பொருள். பொதுவாகப் பறவைகளின் உடல் வெப்ப நிலை 104 முதல் 112 பாரன்ஹீட் வரை இருக்கும். பறவைகளுக்கு வியர்வைச் சுரப்பிகள் கிடையாது. ஆனால் உடலை மூடிப் பாதுகாக்கும் இறகுகள் உடல் வெப்ப நிலையை நிலை நிறுத்த பெரிதும் உதவுகின்றன.

● ஆர். அருண்குமார், திண்டல், ஈரோடு மாவட்டம்.

*? நிலா எவ்வளவு பெரியது ஜக்கு?*

பூமியையும், சூரியனையும் விட நிலா சிறியது. நிலாவின் குறுக்களவு 3476 கி.மீ. இது பூமியின் குறுக்களவில் ஏறக்குறைய கால் பங்கு. சூரியனும் நிலாவும் நம் பார்வைக்கு ஒரே குறுக்களவு கொண்டவை போல் தோன்றினாலும் நிலாவைக் காட்டிலும் சூரியன் மிகப் பெரியது. பூமியிலிருந்து நிலா உள்ள தூரத்தைப் போல் 400 மடங்கு தொலைவில் சூரியன் இருக்கிறது.

● ந. சரவணன், பாண்டிச்சேரி

*? ஜக்கு, உன்னைப் பொறுத்தவரை சிங்கம் வலிமையானதா, புலி வலிமையானதா?*

! என்னைப் பொறுத்தவரை மட்டுமல்ல; பொதுவாகவே சிங்கத்தை விட புலி வலிமையானது சரவணன்.

# கோடை விடுமுறைப் போட்டி - II


• ருக்மணி தேவி


• மொரார்ஜி தேசாய்


• சரோஜினி நாயுடு

இங்கு பிரபலமான ஐந்து பேரின் புகைப்படங்கள் உள்ளன. இவர்கள் அனைவருக்கும் ஓர் ஒற்றுமை இருக்கிறது. அது என்ன என்பதைக் கண்டுபிடித்து எழுத வேண்டியதுதான் போட்டி. சரியான விடையுடன் முகவரி கூப்பனை ஒட்டி, உங்கள் முழு முகவரியையும் எழுதி அனுப்புங்கள். அயல்நாட்டு வாசகர்கள் தங்கள் இந்தியத் தொடர்பு முகவரியைக் கண்டிப்பாகத் தர வேண்டும். சரியான விடை எழுதிய 10 பேருக்குப் பரிசு வழங்கப்படும். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

கடைசித் தேதி 15.06.2003


• ஆபிரகாம் லிங்கன்


• பரமஹம்சர்

## என்ன ஒற்றுமை?

ஆசிரியர்,
கோகுலம்,
47.N.P. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97



# பொற்குவியல் எங்கே?

கதை : சச்சின் சக்திவேல்

படம் : மகேஸ்
















அடுத்த நாள் மன்னர் மாறுவேடத்தில் நகருக்குள் சென்றார்.
அரசருக்குக் களைப்பு ஏற்பட, ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார முடிவு செய்தார்.


ஐயா, என்ன உடல் நலக் குறைவா?
அதெல்லாம் ஒண்ணுமில்லை. சும்மாதான் படுத்திருக்கிறேன்.


எல்லோரும் வைக்கோல் கட்டுகளுடன் அரண்மனைக்குச் செல்கிறார்கள். நீங்கள் போகலையா...?
என்னிடம் இல்லாத பொற்காசுகளா? யாருக்கு வேணும் அந்தச் சில்லறைக் காசுகள்!


சரி, அரண்மனையில் திருடிய பொற்காசுகளைக் கொண்டு வா.
என்ன உளறுகிறாய்? நீ யார்?


பொற்குவியல் உன்னிடம் இருப்பதால்தான் அரசர் கொடுப்பது உனக்கு அற்பமாகத் தெரிந்திருக்கிறது. வீரர்களே, இவனை அழைத்து வாருங்கள்.
ஐயோ... மன்னா, என்னை மன்னித்து விடுங்கள்.

# GOKULAM

The magazine for children

brings you this JUNE



## MESMERISING MYTHOLOGY

PLUS

## HARRY POTTER TWO-PART CONTEST WITH A BUMPER PRIZE!



Get your copy today for Rs.6/- only!

For subscriptions
mail to :
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal,
CHENNAI - 600 097.
subscription@kalkiweekly.com




# மனஸ்தாபம் பகையை வளர்க்கும்!

**வா**சுவும் சக்தியும் நண்பர்கள். அன்று விளையாட்டு வகுப்பு. ஆசிரியர் ஓட்டப் பந்தயம் வைத்தார். சக்தியுடன் இன்னும் நான்கு மாணவர்கள் ஓடத் தயாராக நின்றனர். வாசு தன் நண்பர் களுடன் ஓரமாக நின்று கொண்டிருந் தான். விசில் சத்தம் கேட்டதும் எல் லோரும் ஓடத் துவங்கினர். கரவொலி எழுப்பிக் கொண்டிருந்த வாசுவிடம் நண்பன் ஒருவன் ஜோக் சொல்ல, வாசு சிரித்து விட்டான். அதேநேரம் கல் இடறி கீழே விழுந்தான் சக்தி.

நிமிர்ந்த சக்தி வாசு தான் விழுந்ததைப் பார்த்து சிரித்த தாக எண்ணிக் கொண்டான். வாசு ஓடி வந்து அவன் எழ உதவி செய்ததைக் கூட அவன் பொருட்டாக நினைக்கவில்லை.

உடனே அவனைப் பழி வாங்கத் துடித் தான். மறுநாள் அறிவியலில் கிளாஸ் டெஸ்ட். வாசு இல்லாத நேரமாகப் பார்த்து அவனின் அறிவியல் புத்தகத்தைப் பள்ளி அலமாரியில் மறைத்து வைத்தான்.

**வீ**ட்டில் போய் அறிவியல் புத்தகத் தைத் தேடிய சக்திக்கு ஒரே அதிர்ச்சி. காலையில் வாசு புத்தகத்தை மறந்து விட்டு வந்திருந்ததால் சக்தியின் புத் தகத்தை எடுத்துப் படித்துக் கொண் டிருந்தான். அந்த விஷயம் சக்திக்குக் கோபத்தில் நினைவுக்கு வரவில்லை. மறு நாள் குறைந்த மதிப்பெண் பெற்று ஆசிரி யரிடம் திட்டு வாங்கியபோது வாசுவின் மேல் மேலும் மனஸ்தாபம் உண்டானது.

**ம**றுவாரம் சக்தியிடம் மாவட்ட அளவிலான பேச்சுப் போட்டிக்குப் பெயர் கொடுப்பவர்களைப் பட்டியலிட்டு எடுத்து வரச் சொன்னார் ஆசிரியர். எப் பொழுதும் பேச்சுப் போட்டியில் பரிசு வாங்குபவன் வாசு. அவன் பெயர் கொடுத்தும் சக்தி பெயரைச் சேர்க்க வில்லை. போட்டிக்குச் செல்லும் போதுதான் வாசுவுக்கும் ஆசிரியருக்கும் விஷயம் தெரிந்தது. ஆசிரியர் கடுமை யாக முயற்சி செய்து வாசுவைப் போட்டிக்கு அழைத்துச் சென்றார். பெயர் சேர்க்காத சக்தியைத் தலைமை ஆசிரியர் கண்டித்தார்.

மனஸ்தாபம் என்னும் நோய் மன திலிருந்தால் யார் மீது மனஸ்தாபம் வைத்திருக்கிறோமோ அவனுக்குத் தீங்கு செய்யத் தூண்டிக் கொண்டேயிருக்கும்.

இதை உணர்த்தும் குறளைக் கண்டு பிடியுங்கள்.

இகலென்ப _____ _____ _____
பண்பின்மை _____ நோய்.

\- தம்பிப்பயல்

# பொருட்காட்சி

முதல் பரிசு:
ஆர். ஹரிணி, ஏழாம் வகுப்பு,
ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி வித்யாலயா,
திருவானைக்காவல்,
திருச்சி மாவட்டம்.




இரண்டாம் பரிசு:
எம். ஜெகதீஸ் சந்தர்,
பதினோராம் வகுப்பு,
அமலா மேல்நிலைப்பள்ளி,
எடப்பாடி, சேலம் மாவட்டம்.

மூன்றாம் பரிசு:
**ஆர். அனுராதா,**
ஏழாம் வகுப்பு,
ஆரோக்கிய மாதா பள்ளி,
திருச்சி.

ஆறுதல் பரிசு:
**ச. சௌந்தர்ய பவதாரிணி,**
எட்டாம் வகுப்பு,
சக்திராம் பாரதி மகளிர்
உயர்நிலைப் பள்ளி, கடையம்.



ஆறுதல் பரிசு:
**எஸ். ஸ்ரீவித்யா,**
ஏழாம் வகுப்பு,
நகர மேல்நிலைப் பள்ளி,
கும்பகோணம்.

## வண்ணத் தூரிகை

மே இதழில் 'சுற்றுலா பொருட்காட்சி' என்ற தலைப்பில் அறிவித்த போட்டியில் கலந்து கொண்டு ஐந்து பேர் பரிசு வாங்கியிருக்கின்றனர். அவர்களுக்கு நம் வாழ்த்துகள்!




# உங்களிடமிருந்து...

✉ 'விஞ்ஞானி கடத்தல்' படக்கதை ஆரம்பமே அசத்தல். அடுத்தடுத்த மாதங்களில் என்னென்ன திருப்பங்கள் நிகழும் என்ற ஆவலைத் தூண்டி எதிர்பார்க்க வைத்துவிட்டது. வௌவால்கள் சுற்றுச் சூழல் சீர்கேட்டால் வேகமாக அழிந்து வருகின்றன என்பதைப் படித்ததும் அவற்றை எப்படியாவது பாதுகாக்க வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டது.

-ஆர்.ஆர். ப்ரியதர்ஷினி
பூனாம்பாளையம்,
திருச்சி மாவட்டம்

✉ 'யாருக்கு, எத்தனை ஐஸ் கிரீம்?' விளையாட்டு எங்களுக்கு ரொம்ப ஜாலியாக இருந்தது. என் நண்பன் என்னை அதிகம் தோற்கடித்து விடுகிறான். தோற்றாலும் மீண்டும் மீண்டும் விளையாட ஆர்வம் வருகிறது. இதேபோல் இன்னும் நிறைய விளையாட்டுகளை எதிர்பார்க்கிறேன்.

- மாதவன்,
திருப்பாலைத்துறை.

✉ மே மாத கோகுலத்தில் எல்லா படைப்புகளும் நன்றாக இருந்தன. எங்களுக்காகக் கோடை விடுமுறைப் போட்டி அறிவித்திருந்தீர்கள். மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். நெட் பிட்ஸ் சுவாரசியமாக இருக்கிறது. எங்கள் மாவட்ட ஸ்பெஷலை விரைவில் அறிவிக்க வேண்டுகிறேன்.

- ஆ. சந்தியா, ஒன்பதாம் வகுப்பு,
அ.மே.நி.பள்ளி, நல்லூர்.

✉ டென்னிஷின் குறும்புத்தனத்தை நினைத்து சிரிப்பதா, கவலைப்படுவதா என்று தெரியவில்லை. திருச்சி ஸ்பெஷல் சுவாரசியமாக இருந்தது. விஸ்வேஸ்வரய்யா எவ்வளவு அற்புதமான மனிதர் என்று கோகுலத்தைப் படித்த பிறகுதான் தெரிந்து கொண்டேன்.

- எஸ். பாஸ்கர், பத்தாம் வகுப்பு,
அ.ஆ.மே.நி.பள்ளி, புதுக்கோட்டை.

✉ 'ஆஹா, என்ன ருசி!' கதையைப் படித்து நன்றாகச் சிரித்து விட்டேன். 'விஞ்ஞானி கடத்தல்' படமும், கதையும் ஆரம்பமே அருமையாக இருந்தது. அலுமினியத்தைப் பற்றிய கட்டுரை என்னைப் போன்ற மாணவர்களுக்கு மிகவும் பயன்படும்.

- ஆர். கண்ணன், பதினோராம் வகுப்பு,
அ.உ.நி. பள்ளி, சேலம்

✉ கடைசிப் பக்க கவிதைக்கான படம் மிகவும் அழகாக இருந்தது. விஸ்வேஸ்வரய்யாவின் வாழ்க்கையை ஒவ்வொரு மாணவரும் படிக்க வேண்டியது அவசியம்.

- பி. பாரதி, ஒன்பதாம் வகுப்பு, பாளையங்கோட்டை

## ஓவியப் போட்டி

துள்ளி ஓடும் மான்களைக் கண்டு மிகவும் ரசித்திருப்போம். இந்த மாத ஓவியப் போட்டியின் தலைப்பு - **மான்கள்.** புள்ளி மான், கஸ்தூரி மான், பனி மான் என எந்த வகை மான்களாகவும் இருக்கலாம். படம் வண்ணத்தில் இருப்பது அவசியம். சிறந்த ஓவியங்களுக்கு முதல், இரண்டாவது, மூன்றாவது மற்றும் இரண்டு ஆறுதல் பரிசுகள் வழங்கப்படும். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது. முகவரியை அவசியம் குறிப்பிடுங்கள்.

கடைசித் தேதி **6.6.2003**



# நேரம் வரும் காத்திரு!

## ⑤ சதாசிவத்துக்குப் புதிய பொறுப்பு

கோடை விடுமுறை முடிந்து பள்ளிக்கூடம் தொடங்க மூன்று நாட்கள்தான் இருந்தன. பொற்கேணி பள்ளிக்கூடத்தில் இருந்து ராகவ் வெளியேற்றப்பட்டதால், சென்னையிலேயே வேறு பள்ளியில் அவனைச் சேர்த்திருந்தனர். அருண், வில்சன், கரீம் மூவரும் கூட ராகவ்வோடு அவன் பள்ளியிலேயே சேர்ந்து விடுவதாக எவ்வளவோ கேட்டுக் கொண்டும் மறுத்துவிட்டனர்.

செங்கல்பட்டு ரெஸ்டாரண்ட் ஒன்றில் -

"என்ன தலைவா! என்ன ஆச்சு? நீ நெனைச்சபடி ஒரு விக்கெட் காலி போலிருக்கு!"

"ஓ... அந்தக் கதையா! ம்... போன முறை ஆனுவல் எக்ஸாம் முடிஞ்சதுமே அவனை அனுப்பிட்டாங்களே!". "அடுத்தகட்ட நடவடிக்கை என்னவோ?"

"அடுத்து என்ன...! ஸ்கூலுக்கு இருக்கிற நல்ல பேரைக் கெடுக்கணும். அதுக்கு ஒண்ணு இங்க இருக்கிற நல்ல பேரு வாங்கித் தர்ற டீச்சருங்க, பசங்களை ஒவ்வொருத்தரா இங்கிருந்து காலி பண்ணனும்."

"அது சரி! ஆனா என்னைக்கோ நீ ஏடாகூடமா மாட்டப் போறே!"

"இவங்க கிட்ட மாட்டினால் என்னை என்ன பண்ணிடுவாங்க? போன வருஷம் ஒரு விக்கெட்! இன்னும் ரெண்டு மாசத்துல எங்க ஸ்கூல்ல சயின்ஸ் எக்ஸிபிஷன் நடக்கும். அப்ப கெமிக்கல்ஸ்ல ஏதாவது மிக்ஸ் பண்ணி வெடிக்க வைச்சி ரகளையாக்கலாம்னு யோசிச்சிட்டு இருக்கேன். அப்ப பத்திரிகைல நியூஸ் வந்து ஸ்கூல் பேரு நாறும் பாரு!"

''அடப்பாவி, பசங்களுக்கு ஏதாவது ஆயிடப் போகுதுடா!''

''அதுக்குள்ளே வேற ஏதாவது ஸ்கூல்ல சான்ஸ் கிடைச்சா இன்னும் பெருசா ஏதாவது பண்ணிட்டுப் போயிடலாம்ன்னு பார்க்கிறேன்! ஒண்ணும் ஒர்க் அவுட் ஆக மாட்டேங்குது.''

''நீ எதுவும் பண்ணிக்கோ! எனக்கு இப்ப டையமாச்சு! கிளம்பறேன். மத்ததை அப்புறம் பேசுவோம், வரட்டா?''

இருவரும் பில்லுக்குப் பணம் கொடுத்துவிட்டுக் கிளம்பினர்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு ராகவ் வீட்டில்...

''நாலு பேரும் சேர்ந்து ராகவ் பண்ற 'சையின்ஸ் கிட்'டுக்கே வேலை செய்யறீங்களே! உங்க ஸ்கூலும் தானே இந்த எக்ஸிபிஷன்ல கலந்துக்குது. நீங்க எதுவும் செய்யலையா?''என்றார் ராகவ்வின் அப்பா, வீட்டுக்கு வந்திருந்த ராகவின் நண்பர்கள் - அருண், கரீம், வில்சனைப் பார்த்து.

''இதே கேள்வியைத்தான் அங்கிள் நானும் கேட்டேன். ஆனா ஃப்ரெண்டுக்காகத் தியாகியாயிட்டாங்



களாம். ராகவ் ஸ்கூல்ல அவன் புதுசாம். அங்க அவனுக்கு நல்ல பேரு கிடைக்கணுமாம். அதுக்காக எல்லாரும் சேர்ந்து ராகவ்க்குப் புதுமையா ஏதாவது செய்யணுமாம். இதுக்காக என்னை வேற தொந்தரவு பண்றாங்க. நான் பழசையெல்லாம் படிக்க வேண்டியிருக்கு."

"உன்னால முடியாட்டி முடியாதுன்னு சொல்லிடு அக்கா! அதை விட்டுட்டு நீயே ஐடியா கொடுத்துட்டு... இப்ப அது சரியா வரலைன்னு இப்படி கமெண்ட் அடிச்சா எப்படி?" என்று கோரஸாகக் கூவினர் நால்வரும்.

பேச்சுடன் கூடவே ராகவ்வின் 'சையின்ஸ் கிட்'டும் வெற்றிகரமாக ரெடியானது.



பொற்கேணி பள்ளி ஹாஸ்டல். எக்ஸிபிஷன் முடிந்து சந்தடியெல்லாம் ஓய்ந்த ஞாயிற்றுக்கிழமை. இன்டோர் கேம்ஸ் ரூமில் இங்கொன்றும் அங்கொன்றும் மாணவர்கள் பிடித்த விளையாட்டுகளில் ஆடிக்கொண்டிருந்தனர். சிலர் ஓய்வாக அமர்ந்து விளையாடுபவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"நம்ம ஸ்கூல்ல போன வருஷம் படிச்சானே அந்த ராகவ்க்குத்தானே இந்த எக்ஸிபிஷன்ல 'பெஸ்ட் ஸ்டூடண்ட் கிட்' ஃபர்ஸ்ட் பிரைஸ் கிடைச்சது?" கரீமுடன் செஸ் விளையாடிக் கொண்டிருந்த அருணிடம் கேட்டான் சக மாணவன்.

"ஆமாம். அதுக்கு இப்ப என்ன?" - அருண்.

"அதுக்கு ஒண்ணும் இல்லை. அவன் வரலைன்னா. எனக்கு ஃபர்ஸ்ட் பிரைஸ் கிடைச்சிருக்கும். அவன் உங்க ஃபிரண்ட்தானே! உங்களோட இருக்கிற வரைக்கும் சாதாரணமாத்தான் இருந்தான், உங்களைப் போலவே! இங்கிருந்து போனதும் புத்திசாலியாயிட்டான் போல!"

"என்ன நக்கலா?" அருண் திரும்பி முறைத்தான்.

"அப்புறம்... நீங்க யாராவது அது மாதிரி செஞ்சீங்களா? செய்ய முடியுமா?"

"உண்மை என்னன்னு தெரியாம உளறாதே! அதைச் செஞ்சதுல எங்களுக்கும் பங்கு உண்டு."

"அப்ப அவன் செய்யலையா? சொல்டா! இப்பவே போய் சதாசிவம் சார்கிட்ட தகவல் சொன்னா, அந்த பிரைஸை நம்ம ஸ்கூலுக்கு வாங்கிட்லாம். வாங்க... போய் சார்கிட்ட சொல்லலாமா?"

"வேணாம். அவன் ஒண்ணும் ஏமாத்தி அதை எடுத்துட்டுப் போகலை. நாங்க தெரிஞ்சிதான் அதை அவன்கிட்ட கொடுத்தோம்."

"என்னது... உங்க ஃபிரண்டுன்றதால அவன்கிட்ட கொடுத்துட்டீங்களா? நம்ம ஸ்கூல் சார்புல வந்திருந்தா... ப்ரைஸ் நமக்குக் கிடைச்சிருக்கும் இல்லே! வேணும்ன்னே நீங்கதான் அவங்களை ஜெயிக்க விட்டதா சதாசிவம் சார்கிட்ட ரிப்போர்ட் பண்ணப் போறேன்."

"போடா... போய் சொல்லு! அப்படியாவது எங்களையும் அவன் ஸ்கூலுக்கு அனுப்பறாங்களான்னு பார்ப்போம்" கொஞ்சம் கோபமும்,

* மூக்குக் கண்ணாடியைக் கண்டுபிடித்தவர் எ.ஜி. பிக்.
- வெ. ராதாகிருஷ்ணன், தஞ்சாவூர்

கொஞ்சம் வருத்தமும் வெளிப்பட சொன்னான் அருண்.

"அது சரி.. என்னடா பிரைஸ் கொடுத்தாங்க?'' அருணிடம் இன்னொருத்தன் கேட்டான்.

"சயின்ஸ் ஃபிக்ஷன் கலெக்ஷன் கொடுத்திருக்காங்க!'' என்றான் அருண்.

"சயின்ஸ் ஃபிக்ஷன்னா...?"

"ஆமாம். அறிவியல் விஷயங்களை அடிப்படையா வெச்சி - இப்படி நடக்கும்... அப்படி நடக்கும்ன்னு கற்பனை பண்ணி எழுதற கதைங்க! அதைப் படிச்சா நாளைக்கு எந்த மாதிரியெல்லாம் நடக்க வாய்ப்புகள் வரலாம்ன்னு தெரிஞ்சிகிட்டு நம்மை மாதிரி பசங்க பின்னாடி ஆராய்ச்சில ஈடுபட ஆர்வம் வருமாம். அதுக்காகத்தான் கொடுத்தாங்களாம்."

"ம்... நாளைக்கு என்ன நடக்கும்னு சொன்னதும் ஞாபகம் வருது. உனக்கு நெட்ல ப்ரொஸ் பண்ணத் தெரியும்தானே அருண்?"

"பண்ணியிருக்கேன். வில்சன் வீட்டுல நெட் கனைக்ஷன் இருக்கே! எதுக்கு கேட்கற?"

"இந்த ஸ்போர்ட்ஸ் ஸ்டாருங்களுக்கெல்லாம் 'ட்ரக்ஸ் டெஸ்ட்'ன்னு சொல்றாங்களே அது பத்தி எனக்குத் தகவல் வேணும். தேடித் தர்றியா?"

"அடுத்த வாரம் ஊருக்குப் போறபோது பார்த்து பிரிண்ட் அவுட் எடுத்துட்டு வரேன்" - அருண்.

பொற்கேணி பிரின்ஸ்பாலின் அறை. வைஸ் பிரின்ஸ்பாலும், சதாசிவம் வாத்தியாரும் பிரின்ஸ்பாலைப் பார்க்கக் காத்திருந்தனர். முக்கியமான போன்கால் ஒன்று பேசிக் கொண்டு இருந்தார் அவர்.

''சதாசிவம்... எக்ஸிபிஷனுக்காக எவ்வளவோ செலவு பண்ணியும் நாம எதிர்பார்த்த அளவு சாதிக்க முடியலை! கவனிச்சீங்களா? இந்த வருஷம் 'ஸ்டூடண்ட் கிட் ஃபார்ஸ்ட் பிரைஸ் வாங்கின பையன், போன வருஷம் வரைக்கும் நம்ம ஸ்கூல்ல படிச்சவன்தான். அது சம்பந்தமா பிரின்ஸி ஏதாவது கேப்பாருன்னு நெனைக்கிறேன்."

"ஆமாம் சார்!" என்று சதாசிவம் சொல்லிக் கொண்டிருந்தபோதே பிரின்ஸ்பால் அழைப்பதாகத் தகவல் வர, இருவரும் அவரது அறைக்குச் சென்றனர்.

"வி.பி...! நேரா விஷயத்துக்கு வரேன்! இந்த வருஷம் நம்ம ஸ்கூல் ஒரு பிரைஸ் கூட வாங்கலை, ஏன்?"

"........" இருவரும் அமைதி காத்தார்கள்.

"என்ன சதாசிவம்... நீங்கதானே சீனியர் மோஸ்ட் சயின்ஸ் டீச்சர்! நீங்கதான் பதில் சொல்லணும். சும்மாயிருந்தா எப்படி?"

"சார்...! பிரைஸ் வாங்கின அந்த ராகவ் பையனை வளர்த்ததுகூட நாமதானே சார்!"

"இது சரியான விளக்கம் இல்லை சதாசிவம். அவன் வெளியே போயிட்டான்னா போனதுதான். அவனை விட்டா வேற யாரும் நம்ம ஸ்கூல்ல படிக்கறப் பசங்க இல்லையா? சரி! அதை விடுங்க! ஸ்டூடண்ட் செக்ஷன் தவிர மத்த செக்ஷன்ல கொடுக்கற வேற எந்த ப்ரைஸும்கூட நமக்குக் கிடைக்கலையே! என்ன பண்ணிட்டு இருக்கோம்?" என்றவர் வி.பி.யின் பக்கம் திரும்பி, "என்ன வி.பி, ஏன் சும்மாயிருக்கீங்க? என்ன விஷயம்... எங்க கோளாறுன்னு சொல்லுங்க! அதைக் கண்டுபிடிச்சி சொல்லத்தான் நம்மை இங்க வெசசிருக்காங்க! வெறும் சம்பளம் வாங்க மட்டுமில்லை... தெரியுதா?" என்று பொரிந்தார்.

"சார்... எனக்கு வந்த தகவலின்படி முதல்



## சுழல் கோப்பை வேண்டுமா?

ஒவ்வோர் ஆண்டும் கோகுலம் இதழ்களில் எந்தப் பள்ளியின் படைப்புகள் அதிகம் இடம் பெறுகின்றனவோ, அப்பள்ளிக்குச் சுழல் கோப்பை வழங்கப்பட்டு வருகிறது. இந்த ஆண்டு சுழல் கோப்பையை உங்கள் பள்ளி பெற வேண்டுமா? அப்படியென்றால் உடனே உங்கள் படைப்புகளை அனுப்பி வையுங்கள். உங்கள் நண்பர்களையும் எழுதச் சொல்லுங்கள்.

• வெப்பம் காட்டும் கருவியைக் கண்டுபிடித்தவர் எடிசன்.



ப்ரைஸ் வாங்கின ராகவ்க்கு அதை செஞ்சி கொடுத்ததே நம்ம பசங்கதான் சார்! முக்கியமா அருண், வில்சன், கரீமோட பங்கு அதுல இருக்கு சார்! ஒருவேளை அந்த கிட் போட்டிக்கு வராமலிருந்திருந்தால் நமக்கு ப்ரைஸ் கிடைச்சிருக்கும். ரெண்டாவது இடத்துல இருந்தது நாமதானே சார்!'' என்றார் சதாசிவம்.

''மறுபடியும் தப்பான பதில் சதாசிவம். நம்ம பசங்களுக்கு நம்ம ஸ்கூல் மேல அவ்வளவு அக்கறை, கவனம், ஈடுபாடுதான் இருக்கும்னா நாம எதுக்கு இங்க ஒர்க் பண்ணணும்? நம்ம பசங்க மேலே அபாண்டமா பழி சொல்லக் கூடாது. அதோட நீங்க சொல்றது ஒருவேளை உண்மையாவே இருந்தாலும் அது நம்மோட தப்பு. ஒரு இன்ஸ்டியூஷன்றது ஒரு தனி ஆளை, ஒரு சின்னக் கூட்டத்தை மட்டும் நம்பியில்லை; இருக்க முடியாது. மத்தப் பசங்க எந்த விதத்துல குறைஞ்சி போயிட்டாங்க?'' வரிசையாகக் கேள்வி மேல் கேள்வியாக அடுக்கினார் பிரின்ஸ்பால்.

நீண்ட நேரம் விவாதம் நடந்தது.

இறுதியில், ''அப்படின்னா... உங்களுக்கு ரெண்டு ரெஸ்பான்ஸிபிலிட்டிஸ் இருக்கும் சதாசிவம். ஹாஸ்டல்ல ஸ்டூடண்ட் மேல இன்னும் அதிக கண்காணிப்பு வேணும்னு நீங்க சொல்றது, மத்தவங்க ஒழுங்கா வேலை செய்யலைன்னு சொல்றதுக்குச் சமம். ஆனாலும் நீங்க சொல்றதை மதிச்சி அந்த வேலையை உங்ககிட்டயே ஒப்படைக்கிறேன். நீங்க பேச்சிலர்தானே! ஹாஸ்டல்ல உங்களுக்குத் தனியா சூட் அலாட் பண்ணிடுவாங்க! டெபுடி வார்டனுக்கு உள்ள எல்லா அதிகாரமும் உங்களுக்கும் உண்டு. ஆனா நீங்க ஸ்டூடண்ட் மேல சொன்ன குற்றச்சாட்டை நிரூபிக்க மூணு மாதம் டைம். மத்த விஷயங்கள்ல இம்ப்ரூமெண்ட் காட்ட ஆறு மாதம் டைம். என்னைக்கு சார்ஜ் எடுத்துக்கறீங்க?'' என்றார் பிரின்ஸ்பால்.

டெபுடி வார்டன் பொறுப்பில் இருந்த வி.பி. சதாசிவத்தின் கைகளைப் பிடித்து குலுக்கி, ''வாங்க சதாசிவம்! வாங்க, எவ்வளவு சீக்கிரம் வர்றீங்களோ அவ்வளவு நல்லது'' என்றார்.

''சார், நாளைக்கு சார்ஜ் எடுத்துக்கறேன். இரண்டு வாரங்களில் நம்ம பசங்கள்ல சிலர் பற்றி அதிர்ச்சியான தகவலைத் தர்றேன்'' என்றார் சதாசிவம்.

சதாசிவத்தின் துணிச்சலும், பேச்சும் பிரின்ஸியையும், வி.பி.யையும் ரொம்பவே அதிர வைத்தது. 'ஒருவேளை சதாசிவம் சொல்வது போல தவறுகள் கண்டுபிடிக்கப் பட்டால் அது பள்ளிக்கு நல்லதில்லையே!' என்ற கவலை அவர்களை ஆட்கொண்டது.

(தொடரும்)



# சபரிமலை யாத்திரை

அனுபவம்

என் பெற்றோர் நான் பிறக்கும்போது நேர்ந்து கொண்ட வேண்டுதலை நிறை வேற்றுவதற்கு இந்த ஆண்டு ஜனவரி 12 ஆம் தேதி, நான், அப்பா, மாமா ஆகியோர் குருசாமியின் துணையோடு ரயிலில் சபரி மலை யாத்திரையை மேற்கொண்டோம்.

கோட்டையத்திலிருந்து பேருந்தில் 13ஆம் தேதி காலை பம்பா சென்றோம். அன்றிரவு அங்கிருந்த கேரள அரசு விருந்தினர் மாளிகையில் தங்கினோம்.

பொங்கலன்று (14 ஆம் தேதி) காலை அங்கேயே குளித்துவிட்டு சுமார் 10 மணிக்கு ஒற்றையடிப் பாதை வழியாக நடந்து ஓர் உயரமான பகுதிக்குச் சென்றோம். அந்த நேரத்திலேயே நிறைய பக்தர்கள் அங்கு 'ஜோதி' தரிசனம் செய்வதற்கு சௌகர்யமான இடத்தைத் தேர்வு செய்யக் குவிந்திருந்தனர். ஜோதி தரிசனம் மாலை ஆறரை மணிக்குத்தான் என்றாலும், அங்கே பொழுது போனதே தெரியாமல் எல்லோரும் பேசிக் கொண்டும், பஜனைப் பாடல்களைப் பாடிக் கொண்டுமிருந்தோம்.

மாலை சரியாக 6.35க்குப் பொன்னம்பல மேட்டில் மகர நட்சத்திரம் தோன்றியது. பின் ஐந்து நிமிடத்திற்குள் கலியுக தெய்வம் ஐயப்பன் மூன்று முறை ஜோதி ஸ்வரூபமாய் காட்சியளித்தார்.

அந்த நிமிடங்கள் 'என் வாழ்நாளில் மறக்க முடியாத நிமிடங்கள்' என்றால் அது மிகையாகாது. மறுநாள் (15 ஆம் தேதி) காலையில் புண்ணிய நதியான பம்பையில் நீராடினோம். அன்று மாலை 4 மணிக்கு மணி கண்ட ஸ்வாமியைத் தரிசிக்க இருமுடியுடன் பயணமானோம். 4 கிலோமீட்டர் தூரத்தை 2 மணி நேரம் பயணித்து மலையைச் சென்றடைந்தோம். சபரிமலை சாஸ்தாவைக் கண் குளிர அன்றிரவு 9 மணியளவில் தரிசித்தோம். பின் அங்கே ஓரிடத்தில், இரவு உறங்கி காலையில் குளித்த பின், பதினெட்டாம் படியானை நெய் அபிஷேகம் செய்து வழிபட்டோம். பிறகு மலையிலிருந்து புறப்பட்டு மதியம் 12 மணியளவில் பம்பைக்கு வந்து சேர்ந்தோம்.

இப்படி என் முதல் சபரிமலை யாத்திரை நல்லபடியாக நடந்தேறியது.



- ஆர். சந்தோஷ் கிருஷ்ணன்,
மூன்றாம் வகுப்பு,
கேந்திரிய வித்யாலயா,
சென்னை.

# மாணவர்கள் திறன் வளர்க்கும் "யூசிமாஸ்"

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு - என்பது குறள். அறிவியல் முன்னேற்றத்தில் இன்று அனைத்துமே 'டிஜிட்டல்' முறையில் '0' '1' எண்களாலேயே இயக்கப்படுகிறது. அப்படிப்பட்ட 0 முதல் 9 வரை உள்ள எண்கள் கணிதத்தின் உயிர்நாடி. அப்படிப்பட்ட எண்களை அதுவும் 25 இலக்கம் 10 வரிசை உள்ள எண்களை மனதளவில் சில நொடிகளில் கூட்ட வேண்டும் என்றால் முடியுமா? பிரமிக்க வேண்டாம் முடியும் என்று நிரூபிக்க இன்று நமது நாட்டில் 4 வயது முதல் 12 வயது வரை உள்ள 10 ஆயிரத்திற்கும் மேற்பட்ட சிறுவர், சிறுமியர் பயிற்சி பெற்று வருகின்றனர். பயிற்சி பெற்ற சிலர் நிரூபித்தும் உள்ளனர். இதுதான் மனக்கணித பயிற்சி. அது பற்றி மேலும் விவரம் தெரிந்து கொள்ளவும் மனக் கணித முறை பயிற்சியினால் சிறுவர், சிறுமியருக்கு ஏற்படும் பயன்கள் குறித்தும் 'யூசிமாஸ் மெண்டல் அரித்மெடிக்' நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் பஷீர் அகமது கூறுகிறார். "யூசிமாஸ்" என்பது உலகளாவிய மனக்கணித முறை பயிற்சியாகும். "யூசிமாஸ்" மன கணித முறையின் அடிப்படையான குறிக்கோள் சிறுவர் - சிறுமியரின் முழு மூளை வளர்ச்சிக்கு முக்கியமாக வலது மூளை வளர்ச்சிக்கு தூண்டுகோலாக இருப்பது. வாழ்க்கைக்கு தேவையான முக்கிய திறமைகளை குழந்தைகள் அடையும்படி செய்தல் ஆகியவையாகும். இதுபோன்று சிறுவர் / சிறுமியரின் திறமைகளை வளர்க்க முதல் கட்டமாக "அபாகஸ்" என்ற மணிகளாலான கருவியை கொண்டு பயிற்சியளித்தலாகும். இந்த "அபாகஸ்" கருவி சுமார் 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சீனர்களால் கண்டுபிடிக்கப்பட்டு தற்போது உலகின் பல நாடுகளில் நடைமுறையில் உள்ளது. அபாகஸ் மணி சட்டத்தில் உள்ள மணிகள் இருக்கும் இடத்தை பொறுத்து மதிப்பு பெறுகின்றன. இமேஜிங் ஸ்கில் அல்லது போட்டோ கிராபிக் மெமெரி என்று அழைக்கப்படும், பிம்பத்திறன் ஞாபகசக்தி ஒவ்வொரு மனிதனுக்கும் தேவைப்படும் திறமைகளில் ஒன்றாகும். அபாகஸ் கருவியில் உள்ள மணிகளை நகர்த்தி கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய கணக்குகளை செய்வதன் மூலம் இந்த திறமையை சிறுவர் - சிறுமியர் எளிதாக பெறுகின்றனர். மேலும் இந்த அபாகஸ் பயிற்சியின் மூலம் கவனித்தல், ஒருமுகப்படுத்தப்பட்ட சிந்தனை, தெளிவாக புரிந்து கொள்ளுதல், தன்னம்பிக்கை போன்ற திறமைகளும் வளர்கின்றன. நமது செயல்பாடுகள் அனைத்திற்கும் கட்டளைகள் நமது மூளையிடமிருந்து பெறப்படுகிறது. நமது மூளை இரண்டு அரைக்கோளங்களாக பிரிக்கப்பட்டு இடது மூளை, வலது மூளை என்று அழைக்கப்படுகிறது. நமது உடலின் இடது பாகத்தை வலது மூளையும் வலது பாகத்தை இடது மூளையும் இயக்குகின்றன. இடது மூளை பிரித்து ஆராயும் திறன், எண் கணிதம், மொழி, வாய்மொழி, கணக்கிடுதல், தர்க்கம் ஆகியவற்றை செயல்படுத்துகிறது. வலது மூளை படைக்கும் திறன், மனம், உடலை ஒருங்கிணைத்தல், அங்க அசைவுகள், உணர்ச்சிகள், கற்பனை செய்தல் ஆகியவற்றை செயல்படுத்துகிறது. மூளையில் உள்ள செல்கள் தூண்டப்பட்டு சிறப்பாக இயங்க வேண்டுமென்றால் நமது உடலின் வலது, இடது பாகங்கள் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்க வேண்டும். இந்த செயல்பாடு அபாகஸ் கருவியை பயன்படுத்தும்போது எளிதாக கிடைக்கிறது. காரணம் அபாகஸ் கருவியை இயக்க இரண்டு கரங்களையும் பயன்படுத்த வேண்டும். எனவே அபாகஸ் கருவி மூலம் கணக்கிடும்போது நமது முழு மூளையும் செயல்படுகிறது. முதலில் "அபாகஸ்" கருவி மூலம் பயிற்சியளிக்கிறோம். அந்த பயிற்சியில் அவர்கள் நன்கு தேர்ந்த பிறகு அந்த கருவி இல்லாமல் எண்களை கொண்டு கூட்டல், கழித்தல் போன்ற கணக்குகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. இதற்காக 25க்கும் மேற்பட்ட பயிற்சி ஏடுகள் வழங்கப்படுகின்றன. 30வது மாத இறுதியில் அவர்கள் எவ்வளவு பெரிய கணிதமாக இருந்தாலும் மனதளவிலேயே செய்யும் திறமை பெற்று விடுகின்றனர். அப்போது அவர்களுக்கு மேலும் பல திறமைகளும் வந்துவிடுகிறது. கடந்த 1999ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதன்முதலாக இந்தியாவில் அதுவும் சென்னையில் இதற்காக யூசிமாஸ் மெண்டல் அரித்மெடிக் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தை தொடங்கினோம். ஆரம்பத்தில் எங்களிடம் குறைவான எண்ணிக்கையில் மட்டுமே மாணவர்கள் சேர்ந்தனர். இன்று 15 ஆயிரம் மாணவர்கள் பயிற்சி பெற்று வருகின்றனர். சென்னையில் மட்டும் 62 மையங்கள் உள்ளன. மேலும் தமிழ்நாட்டில் 87 மையங்களும், பாண்டிச்சேரியில் 3 மையங்களும், கர்நாடகாவில் 25 மையங்களும், கேரளாவில் 11 மையங்களும், மகாராஷ்டிராவில் 18 மையங்களும், டெல்லியில் 2 மையங்களும், ஒரிசாவில் 1 மையமும், மொத்தமாக 209 மையங்களும், தற்போது செயல்பட்டு வருகின்றன. சுமார் 350க்கு மேற்பட்டோர் பயிற்சியாளர்களாக பணியாற்றுகின்றனர். மலேசியாவில் உள்ள "அகாடெமி செம்போரா அரித்மெடிக் யூசிமாஸ்" நிறுவனம்தான் எங்களது பிரின்சிபல் நிறுவனமாகும். மலேசியா, சிங்கப்பூர் நாடுகளில் பள்ளிகளிலேயே இந்த மனக்கணித முறை பயிற்சியளிக்கப்படுகிறது. இதே போன்று மகாராஷ்டிரா மாநிலத்திலும் பள்ளிகளில் இந்த பயிற்சி நடத்தப்படுகிறது. இந்தியாவில் உள்ள அனைத்து மாநிலங்களிலும் உள்ள பள்ளிகளில் மாணவர்களுக்கு இந்த மனக்கணித முறை பயிற்சி அளிக்கப்பட்டால் அவர்கள் எதிர்காலத்தில் பல துறைகளிலும் வல்லுனர்களாக திகழ்வார்கள்.



**U C MAS MENTAL ARITHMETIC (INDIA) PVT. LTD.,**


Corporate Office :
# A-1, 1857, 13th Main Road, 6th Avenue, Anna Nagar West, Chennai 600 040. India.
Tel : 91-44 -2618 0468 / 2396 / 4083 / 6427/ 6428 . Fax : 91-44 -2618 0143 / 1706
E-mail : admin@ucmasindia.com website : www.ucmasindia.com

